# திருச்சூழியல்
# துணைமாலையம்மை
# பிள்ளைத்தமிழ்

நூலாசிரியர்
**கவியரசு. கு. நடேச கவுண்டர்**

பதிப்பாசிரியர்
**கோ.ந. முத்துக்குமாரசுவாமி**
மேனாள் முதல்வர்,
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்.



சிரவைக் கௌமார சபை வெளியீடு

உ

# திருச்சுழியல் துணைமாலையம்மை பிள்ளைத்தமிழ்

நூலாசிரியர்
**கவியரசு. கு. நடேச கவுண்டர்**

பதிப்பாசிரியர்
**கோ.ந. முத்துக்குமாரசுவாமி**
மேனாள் முதல்வர்,
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர்.

**வெளியீடு**
**சிரவைக் கௌமார சபை**
**சிரவணபுரம் கௌமார மடாலயம்**
சின்னவேடம்பட்டி, கோவை - 641 049

சிரவையாதீனக் கஜபூசை வெள்ளிவிழா
நினைவு வெளியீடு

வெளியீட்டு எண் : 312

நூல் பெயர் : *திருச்சுழியல் துணைமாலையம்மை பிள்ளைத்தமிழ்*

நூலாசிரியர் : **கவியரசு கு. நடேச கவுண்டர்**

பதிப்பாசிரியர் : முனைவர். கோ.ந.முத்துக்குமாரசாமி

வெளியீட்டு நாள் : 22.03.2012

படிகள் : 300

விலை : ரூ. 30.00

அச்சிட்டோர் : **சௌமி அச்சகம்**
1E, துடியலூர் சாலை,
சரவணம்பட்டி,
கோவை - 641 035.
அலைபேசி : 98422 52779

நூல் கிடைக்குமிடம் : தலைவர்
கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி,
கோவை - 641 049.
தொலைபேசி : 0422-2666370



## நூலாசிரியர் பற்றி...

இந்நூலாசிரியர் கோவை, கவியரசு கு. நடேச கவுண்டர் அவர்கள் திரு. குமாரசாமிக் கவுண்டர், திருமதி அங்கம்மாள் ஆகிய தம்பதியருக்கு மூத்தமகவாக 1901ஆம் ஆண்டு பங்குனி உத்திர நன்னாளில் பிறந்தார். பங்குனி உத்திரத்தில் பிறந்தமையால் நடேசன் எனப் பெயரிட்டுப் பெற்றோர் மகிழ்ந்தனர்.

இளவயதிலேயே தந்தையை இழந்த இவர் தம் தாய்மாமனின் தையல் நிலையத்தில் காஜாத் தொளை எடுக்கும் சிறுவனாக வாழ்க்கையைத் தொடங்கினார். முற்பிறவிப் புண்ணியம் இருந்தமையால் வேட்டைகாரன்புதூரில் சமாதி கொண்டிருக்கும் தவத்திரு அழுக்குச் சாமிகளின் திருக்கண்ணோக்கம் இவர்பால் விழுந்தது. அழுக்குச்சாமிகள் இவருக்குத் தமிழின்பம், சிவபத்தி, திருமுறைப்பயன் ஆகியவற்றை ஊட்டினார்.

பள்ளபாளையம் வையாபுரிப்பிள்ளை என்னும் சான்றோர், சிறுவன் நடேசனுக்கு இயல்பாகவே இருந்த தமிழறிவினை இலக்கணக்கல்வி அளித்து மேலும் வளர்த்தார். பேரூர் சாந்தலிங்கர் திருமடத்தில் தமிழறிஞர்கள் சமயச் சான்றோர்கள் குழுமும் சத்வித்யாசன்மார்க்க சங்கத்தை அறிமுகம் செய்து வைத்தார். கோவை நீதிமன்றத்தில் சிரஸ்தாராகப் பணியாற்றிய பிள்ளை மூலம் வழக்கறிஞர் சிலரிடம் எழுத்தராகப் பணிபுரியும் வாய்ப்பு நடேசனாருக்குக் கிட்டியது. நடேசனார் மதுரைத்தமிழ்ச்சங்கம் நடத்தும் பாலபண்டித் தேர்விலும் பின்னர், சென்னைப் பல்கலைக்கழகப் பண்டிதர் தேர்விலும் முதல்வகுப்பில் தேறி நகராண்மை உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியரானார்.

சத்வித்யா சன்மார்க்க சங்கத்தின் வழியே சிரவணபுரம் கௌமார மடாலயத்தின் குருமூர்த்தியும் கொங்குக் கச்சியப்பருமாகிய தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் அன்புக்கு உரியரானார். சுவாமிகள் இவருக்கு வித்யாகுருவாக விளங்கினார். நடேசனார் சந்தத்தமிழ்க் கவியாக விளக்கம் பெற்றார். பின் நாளில், கோவைத் தமிழ்ச்சங்கத்தாரால் 'கவியரசு' எனும் பட்டம் அளிக்கப் பெற்றார்.

நகராண்மைப் பள்ளியின் ஆசிரியப் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரியில் ஆசிரியராகவும் முதல்வராகவும் சிலகாலம் பணியாற்றினார். மதுரையாதீனம் தவத்திரு சோமசுந்தரப் பரமாச்சாரிய சுவாமிகள், தொண்டைமண்டலவாதீனம் சீலத்திரு ஞானப்பிரகாச சுவாமிகள் ஆகிய பெரியோருடன் நெருங்கிய நட்புக்குரியராக விளங்கினார்.

1972ஆம் ஆண்டு வைகாசி விசாகத்தன்று அம்பலவாணர் திருவடி அடையப்பெற்றார்.



# ஆசியுரை

**தவத்திரு குமரகுருபர சுவாமிகள்**
சிரவையாதீன கர்த்தர்

கவியரசு திருமிகு. கு. நடேச கவுண்டர் ஐயா அவர்கள் தன் சொந்த முயற்சியிலேயே தமிழ் கற்று நல்ல போதாசிரியராக, கவிஞராக, ஆய்வாளராக உயர்ந்து தமிழ்ப்பணி புரிந்த தகைசான்ற சான்றோர் ஆவார். அவர் இறையன்பில் இணையற்றவராகத் தவறாத சிவபூசைச் செல்வராக விளங்கினார். சற்றும் வாய்ப்பற்ற நிலையில் மிகக் கஷ்டப்பட்டு வடமொழியைப் பயின்று அம்மொழியிலும் புலமை பெற்றார். தம்மைப் பொறுத்தவரையில் சைவ சித்தாந்தக் கொள்கையில் அசைக்கமுடியாமல் ஆழங்கால் பட்டிருந்தும், சிவபெருமானின் அடியவர்களாக விளங்கிய அத்துவிதம் முதலிய பிறசமய ஆசிரியர்களின் வடமொழி நூல்களையும் மிகுந்த ஈடுபாட்டோடு மூலத்திற்கு இணையாகத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். கவியரசு அவர்களின் நியாயக் களஞ்சியமும், அப்பர் தேவாரத் திறனாய்வும் தமிழ்ச்சைவ இலக்கிய ஆய்விற்கு மிகச் சிறந்த கருவி நூல்களாகும்.

திரு. நடேசகவுண்டர் ஐயா அவர்கள் நம் ஆதீனத்தின் இரண்டாவது குருமகா சந்நிதானங்களிடம் தமிழ்நூல்கள் பலவற்றைப் பாடங்கேட்டார். ஆசிரியரின் படைப்புக்கு மாணவர் சிறப்புப்பாயிரம் அளித்தல் என்னும் மரபு பற்றிச் சுவாமிகளின் பல நூல்களுக்குக் கவியரசு சாற்றுக்கவி அளித்துள்ளார். அவ்வாறே திரு. கவுண்டர் ஐயா அவர்களின் படைப்புகளுக்கும் சுவாமிகள் சாற்றுக்கவிகள் அருளியுள்ளார். தம்பால் தமிழ்கற்க வந்த சிலரைச் சுவாமிகள் கவியரசு அவர்களிடம் ஆற்றுப்படுத்தினார் என்பதிலிருந்தே அவரைச் சுவாமிகள் எந்த அளவு மதித்திருந்தார் என்பதை அறியலாம்.

கவியரசு அவர்களின் படைப்புகளைத் தமிழ்ச் சிற்றிலக்கிய வகைகள், மொழி பெயர்ப்புகள், இசைப் பாடல்கள், ஆய்வு நூல்கள் உரைகள் என வகைப்படுத்தலாம். சிற்றிலக்கியங்களுள் எட்டுப்

பிள்ளைத் தமிழ்கள், ஒரு கலம்பகம், இரு தூதுகள், ஒரு தாலாட்டு, ஒரு திருப்பள்ளியெழுச்சி, சில பதிகங்கள் முதலியன அடங்கும்.

திருச்சுழியல் என்பது பாண்டிநாட்டுப் பாடல்பெற்ற தலங்களுள் ஒன்று. துணைமாலை அம்மையுடனமர் திருமேனிநாதர் எழுந்தருளியுள்ளதும் சுந்தரர் தேவராம் பெற்றதுமாகிய திருத்தலம். இதன் பழைய பிள்ளைத்தமிழின் 56 செய்யுள்களுக்கு மேல் உள்ள பகுதி மறைந்துவிட்டன. அந்தக் குறை நூலை முழுமையாக்கித் தரும்படி இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் திரு. டி.எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் கேட்டுக் கொண்டபடி கவியரசு அவர்கள் ஏனைய செய்யுள்களை இயற்றி நூலை முழுமையாக்கி அளித்தார். இது 1964இல் முதன்முறையாகப் பதிப்பிக்கப்பட்டது.

இப்பொழுது கவியரசு அவர்களின் நூல்கள் அனைத்தையும் சில தொகுதிகளாக வெளியிடும் திட்டத்தின் கீழ் அவருடைய மைந்தரும் பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரியின் மேனாள் முதல்வரும் ஆகிய முனைவர் கோ.ந. முத்துக்குமாரசாமி அவர்கள் தெளிவான குறிப்புரையுடன் பதிப்பித்துள்ளார். இது பயன்மிக்கதொரு நல்ல பதிப்பாக அமைந்துள்ளது. அன்பர்கள் அனைவரும் இந்நூலைத் துய்த்து மகிழவேண்டும் என விழைகிறோம்.

கவியரசு அவர்களின் எட்டுப் பிள்ளைத் தமிழ் நூல்கள் இப்போது பதிப்பாகின்றன. இந்நூல்கள் திருமிகு. நடேசக்கவுண்டர் ஐயா அவர்களின் அருந்தவப் புதல்வி திருமதி. ந. அங்கயற்கண்ணி அவர்களின் புண்ணியப் பொருளுதவியுடன் வெளியிடப்படுகின்றன. போற்றுதலுக்குரிய சிரவையாதீனம் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் அவர்களின் செயற்கரிய செயலாகிய கஜபூசையின் வெள்ளிவிழா நினைவு மலர்களாக இவை மலர்வது மிகப் பொருத்தமானது. தமிழ்மொழியின் ஆடி அசலங்களை நன்கு அறிந்துகொள்ள இத்தகைய நூல்களை அனைவரும் படித்துப் பார்க்க வேண்டும் என விழைகிறோம்.

# அணிந்துரை



முனைவர். ந. இரா. சென்னியப்பனார்,
தலைவர், மணிவாசகர் அருட்பணி மன்றம்,
பேரூர், கோவை - 10.

புவியரசு பங்கயத்தான் புரந்தரன் போற்றுகின்ற
புவிபாகம் உமைபாகன் புகழ்பாடும் திருமுறையின்
செவிபரசும் இசையுணர்ந்தோன் செழுந்தமிழின் திறமுணர்ந்தோன்
கவியரசு நடேசனார் கழலடியைக் கருத்திருத்துவாம் 1

மங்கையர்க் கரசிமேல் மாண்பான பிள்ளைத்தமிழ்
கங்கையற் குபதேசி கனிமுருகன் பிள்ளைத்தமிழ்
தங்கையன் எட்டிக்குடி தகவான பிள்ளைத்தமிழ்
அங்கையன் பழனியாண்டி அணிமயில் விடுதூது 2

திருநிலை நாயகி திறம்பேசும் பிள்ளைத்தமிழ்
பெருநிலை கந்தசாமி பேர்போற்றும் பிள்ளைத்தமிழ்
ஒருநிலை திருமுடியார் உயர்நெஞ்சு விடுதூது
தருநிலை பேரூரின் தரமான கலம்பகம் 3

பகுதியாய்த் துணைமாலை பாங்கான பிள்ளைத்தமிழ்
தகுதியாய்ப் படைத்தளித்த தண்டமிழின் கவியரசு
தொகுதியாய் வெளிக்கொணரும் தோன்றல் குமரகுருபரர்
மிகுதியாய் இவர்பாதம் மேல்வைத்து வணங்குதுமே 4

சிரவைநகர்க் கந்தசாமி சீரடியைத் துதித்திடுவோன்
அரவையணி பெம்மானின் அடிவணங்கும் பெருந்தவத்தோன்
இரவைநிகர் மலமோட்டும் இனியதமிழ்க் கவியரசு
கரவைமனம் இல்லாத கற்றறிந்த பெரும்புலவன் 5

கோவைநகர்க் கவியரசு கொண்டகொள்கை மாறாதான்
ஆவைநிகர் அழுக்குசாமி அருந்தவத்துச் சாதுசாமி
காவைநிகர் இராமானந் தர்கழலடி கருத்துறுவோன்
ஏவைநிகர் விழியுடைய எம்மன்னை அருள்பெற்றோன் 6



பொன்னிறம் தரும்சைவ வெண்ணீறு மங்காது
பூசுககண் மணிகள் அணிக
புலைகொலை மயக்கம் நீர்ஒழிக மன்னுயிரையுன்
போலன்பு கொடுபோற்றுக
மன்னுசிவ பத்தரைப் பாகவதர் தம்மையரன்
மாலென மதிக்கநீர்தூய்
மலரிட்டு வழிபாடு செய்தபின்னே யுணவு
வாயிடுக, தெய்வநாமம்
உன்னிடுக, எப்போதும் உருவவழி பாடுசெயல்
ஒழியற்க தீயர்கும்பல்
உறலொழிக! இறைவனருள் உனைதேடி வரும்...
(தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பிள்ளைத்தமிழ்)

என்று குருநாதர் கந்தசாமி சுவாமிகள் கூறியதாகக்கவியரசு பாடியுள்ளார்.

1. சைவ வெண்ணீறு மங்காமல் பூசுதல், 2. உருத்திராக்கமணி அணிதல், 3. புலை, கொலை, மது முதலியவற்றை நீக்குதல், 4.மன்னுயிரைத் தன்னுயிர் போல் போற்றல், 5. சிவனடியார்களைச் சிவனாகவே மதித்தும் திருமாலடியார்களைத் திருமாலெனவே மதித்தும் வரவேற்று மலரிட்டு வழிபாடு செய்தபின் உணவு உண்ணுதல். 6. தெய் நாமமாகிய மந்திரத்தை மறவாது கணித்தல். 7. சிவபூசை செய்தல், 8. சிற்றினம் சேராதிருத்தல் ஆகியவற்றை மேற்கொண்டால் திருவருள் தேடி வரும் என்று சுவாமிகள் உபதேசித்ததாகக் கூறியுள்ளார். கவியரசு வாழ்க்கையில் இவற்றை முற்றிலுமாகப் பின்பற்றி வாழ்ந்தவராவர்.

கவியரசு தாம் பாடிய நூல்களில் தவத்திரு சாதுசாமி, தவத்திரு கந்தசாமி சுவாமி ஆகியோரை உரியவிடங்களில் புகழ்ந்து பாராட்டியுள்ளார். பழனியாண்டவர் மயில் விடுதூதில் விநாயகர் காப்பை அடுத்து "தஞ்சமென அஞ்சலெனும் சாதுகுருநாதன்" என்று சற்குருநாதர் வணக்கத்தில் போற்றிப் புகழ்ந்துள்ளார். "எமது தாழ்குடியைக் கொத்தடிமை கொண்ட குருசாது" என் நூலினுள்ளும் குறிப்பிட்டுள்ளார். தவத்திரு சாதுசாமிகள் மீது நவமணி மாலை என்று ஒரு தனிப்பனுவலையும் பாடியுள்ளார். மயில்விடுதூதில் வித்யா குரு துதியில் கந்தச்சுவாமி

கருணாகரச்சாமி, கந்தச்சுவாமிதமப்பச்சாமிஎன்றுகருத்துரைத்தார். தவத்திரு கந்தசாமி சுவாமி பிள்ளைத்தமிழில், அம்மைக் கவிஞன் எங்கள் குரு அருளார் கவி சற்குணமேரு ஆன கந்தசாமி என்றும் "எழுபிறப்பும் வழியடியேம், இயற்றும் தவத்தால் இங்கெய்தி, இணையிலாடல் புரிந்தருளும் எந்தாய்" என்றும் "குருவே கந்தசாமிக்குணக் குன்றே" என்றும் "சிரவைக் கந்த தேசிகனே" என்றும் "அனுபூதியருள் குருகந்தசாமி" என்றும் பலவாறாகப் பாடியுள்ளார். "செய சுந்தரச்சாமி நினது வழிவாழவே" என்று வாழ்த்தியும்உள்ளார்.

கவியரசு அவர்கள் பாராட்டிப் புகழ்ந்த மற்றொருதுறவியார் தவத்திரு திருமுடி சுவாமிகள் ஆவார். அவர்மீது நெஞ்சு விடுதூது என்ற எளிய பனுவலைப் பாடியுள்ளார். கவியரசு அவர்கள் பாடிய முதல் இலக்கியம் இதுவே.

"பிறவிப் பெருங்கடலை நீந்தலெனும் பெட்பே
உறவிக் குவலயத்தே உண்மைத் - துறவித்தோல்
தோணியாம் சற்குரவன் தோன்றுவது எக்காலம் அவற்
காணிய எந்நாள்"

என்று ஏங்கிய கவியரசுக்கு

"அரிய புலன் ஐந்தும் அவித்தார் குணமாம்
பெரிய மலைமேல் நின்று பெற்றியார் - பெரிய
சடைமுடி சூடிய தவராசர் ஆவார்"

ஆகிய ஞானியைக் கண்டார்.

"திருவடி எம்சென்னிமிசைச் சூட்டியருளும்
திருமுடி என்றேத்திச் சிரமேல் - கரமலர்கள் சூடினார்"

"மாற்ற இயலா மனத்திருளை மாற்றியொளி
ஏற்றும் பதத்தாமரை இணையும் - நோற்ற
தவப்பயனால் கண்டேன்"

என்று திருமுடி சுவாமிகளில் பெருமையினைத் தம் முடிமேல் வைத்துப் பாராட்டியுள்ளார்.

1. தவத்திரு திருமுடி சுவாமிகள், 2. தவத்திரு கந்தசாமி

சுவாமிகள், 3. தவத்திரு சாது சுவாமிகள் ஆகிய முப்பெருந்துறவியர்களை மட்டும் பாடியவர் கவியரசு ஆவார்.

"மானிடரைப் பாடாத வண்ணம் பணியடியனேன் இடரைப்
பாட்டை யொழித்து ஏல்"

என்று பேரூர்க் கலம்பகத்தில் பாடியுள்ளார்.

"நாக்கொண்டு மானிடம் பாடேன்" என்றும் "என் நாவில் இன் கவியான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்" என்றும் "மானிடரைப் பாடாமல் மாதவனை ஏத்துமின்" என்றும் ஆழ்வார்கள் கூறியதைப் போல் மானிடம் பாடாத மாக்கவிஞர் கவியரசு.

"வம்பறா வரிவண்டு மணம் நாறமலரும்
மதுமலர் நல் கொன்றையான் அடியலால் பேணா
எம்பிரான் சம்பந்தன்" போலவும்
"பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்" என்ற நம்பியாரூரைப் போலவும்

"தோகைமேல் உலவும் கந்தன், சுடர்க் கரத்திருக்கும் வெற்றி
வாகையே தமக்கு வேலை வணங்குவதெமக்கு வேலை"

என்ற சைவ எல்லப்ப நாவலர் போலவும் வாழ்ந்த பெருங்கவிஞர் கவியரசு.

இலக்கு உடையது இலக்கியம், தமிழ் இலக்கியம் பலவகைப்படும். தொல்காப்பியத்தில் அங்கதச் செய்யுள், ஆற்றுப்படை, ஊரொடு தோற்றம் (உலா), கண்படைநிலை, களவழி, குரவைப்பாட்டு, குழவி மருங்கின்கிழவதாகும், (பிள்ளைத்தமிழ்), கைக்கிளை, கையறுநிலை, கொடிநிலை, துயிலெடை நிலை (பள்ளியெழுச்சி, பரிபாடல் பிசி, புறநிலை வாழ்த்து பெருமங்கலம், முதுமொழி, விளக்குநிலை, வெறியாட்டு முதலிய இலக்கிய வகைகள் காணப்பெறுகின்றன. அவற்றுள் பிள்ளைத்தமிழ் ஒன்று.

தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் புறத்திணை இயலில் வரும் பாடாண்திணை பாடப்பெறும் தலைமகன் பெருமை கூறுவதாகும். "குழவி மருங்கினும் கிழவதாகும்" என்ற நூற்பாவிற்கு, தந்தையரிடத்தன்றி ஒருதிங்களில் குழவியைப்

பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலானும், பாராட்டுமிடத்துச் செங்கீரையும், தாலும், சப்பாணியும், முத்தமும், வரவுரைத்தலும், அம்புலியும், சிற்றிலும், சிறுதேரும் சிறுபறையும் எனப் பெயரிட்டு வழங்குதலானும்" என்று நச்சினார்க்கினியர் விளக்கம் தந்துள்ளார். பிள்ளைத்தமிழுக்கு அக்காலத்து இக்கருத்தே அடிப்படை ஆதாரமாகும்.

ஆழ்வார்களில் பெரியாழ்வார் கண்ணன்மேல் பாடிய பிள்ளைத் தமிழுக்குரிய பருவ அமைப்பின் பாடல்களே பிள்ளைத்தமிழின் தோற்றமாகும். சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் திருஞானசம்பந்தரைப் பற்றிப் பாடும்போது காப்பு, தாலாட்டு, செங்கீரை, சப்பாணி, வருகை, சிறுதேர், சிற்றில் முதலிய பருவங்கள் அமையப் பாடியுள்ளார். சேக்கிழார் பெருமான் காலத்தவரான கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் பாடிய குலோத்துங்கன் பிள்ளைத்தமிழே முதல் பிள்ளைத்தமிழாகும். ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற்பிள்ளைத்தமிழ் எனப் பிள்ளைத்தமிழ் இருவகைப்படும். ஆண்பாற் பிள்ளைத்தமிழ் 1.காப்பு, 2. செங்கரை, 3. தால், 4. சப்பாணி, 5. முத்தம், 6. வருகை, 7. அம்புலி, 8. சிறுபைற, 9. சிற்றில், 10. சிறுதேர் என்றப் பத்துப் பருவங்களை உடையது. பெண்பாற் பிள்ளைத்தமிழ் சிறுபறை சிற்றில், சிறுதேர் ஆகிய பருவங்களுக்குப் பதிலாக அம்மானை ஊசல், நீராட்டு ஆகிய பருவங்களைக் கொண்டிருக்கும். முதல் ஏழு பருவங்களும் இருபாற் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவாக அமைந்திருக்கும். பத்துப் பருவங்களும் கழிநெடில் ஆசிரிய விருத்தங்களால் பருவத்துக்குப் பத்துப் பத்துப் பாடலாக அமைந்திருக்கும். பிற்காலத்தில் தோன்றிய பாட்டியல் இலக்கண நூல்கள் பிள்ளைத்தமிழுக்கு இலக்கணம் வகுத்துள்ளன.

சிற்றிலக்கியங்கள் பாடும் புலவர்களை "வித்தாரகவி" என்று கூறுவது மரபு. காப்பியம் படைப்பதைக்காட்டிலும் சிற்றிலக்கியம் படைப்பது கடினமாகும். காப்பியத்தில் நிகழ்வுகளைக் கூட்டிக் குறைத்துக் கொள்ளலாம். கதைமாந்தர்களுக்கேற்பப் பாடல்களை அமைத்துக் கொள்ளலாம். சிற்றிலக்கியங்களில் அவ்வாறு செய்ய இயலாது. அதுவும் பிள்ளைத்தமிழில் கட்டுப்பாட்டுக்குள் அடங்கியே பாட வேண்டும். அம்புலிப் பருவத்தில் சாமம், பேதம், தானம், தண்டம் ஆகிய நான்கு உபாயங்கள் வருமாறு

பாடுதல் வேண்டும். ஆதலால் "பிள்ளைத் தமிழுக்கு அம்புலி புலி" என்ற மரபு ஏற்பட்டது.

கவியரசு கு. நடேசகவுண்டர் அவர்கள் பிள்ளைத்தமிழ்களுள் 1. சுவாமிநாதன் பிள்ளைத்தமிழ், 2. எட்டிக்குடி முருகன் பிள்ளைத்தமிழ், 3. தவத்திரு கந்தசாமி சுவாமி பிள்ளைத்தமிழ் ஆகியவை ஆண்பாற் பிள்ளைத்தமிழாகும். 1. மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ், 2. துணைமாலையம்மை பிள்ளைத்தமிழ், 3. திருநிலைநாயகி பிள்ளைத்தமிழ் ஆகியவை பெண்பாற் பிள்ளைத்தமிழாகும்.

"சொன்னயமும் பொருள்நயமும் அணிநலமும்
கற்பனையாச் சொல்லா நின்ற
நன்னயமும் தொடைநயமும் வனப்புநய
மும்பிறிது நாட்டா நிற்கும்
எந்நயமும் சிற்சிலவே பிறர்க்கமையும்
நிற்கமைந்த எல்லாம் எண்ணில்
பன்னயமும் உணர்பொன்னுச் சாமிமகி
பா! நினது பாட்டு ஏற்றாமே"

என்று மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் பொன்னுச்சாமித் தேவரைப் பாராட்டியுள்ளார்.

1. சொல்நயம், 2. பொருள்நயம், 3. கற்பனை நயம், 4. தொடைநயம், 5. வனப்பு நயம் ஆகியவை புலவர்களுக்குச் சிற்சிலவே அமையும் என்று கூறியுள்ளார். கவியரசு அவர்கள் பாடல்களில் எல்லா நயங்களும் அமைந்திருப்பதைக் காணலாம்.

சுவாமிநாதன் பிள்ளைத்தமிழ்க் காப்பு முதற்பாடலிலேயே பூமேவு, பாமேவு, தேமேவு, தாமேவு என்று எதுகைத்தொடை அமைந்திருப்பதைக் காணலாம். "ஞானப்பாமேவு திருமுறைகளெனும் அமுத ஒண்டமிழ்ப் பண்ணவர்கள் என்று திருமுறை ஆசிரியர்களைப் பாராட்டியுள்ளார்.

"சாரலிற்போய்ச்சிறு. குறவர்மகட்குச் சலாமிடற்கு ஏக்கறுகுமரனை"

என்று மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழிலும்

கூனேறு மதிநுதற் தெய்வக்குறப்பெண்
குறிப்பறிந்து அருகணைந்துன்

குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந்தவள் தொண்டைவாய்த்
தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்

என்று முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழிலும் குமரகுருபர சுவாமிகள் பாடியதை மனதில் வாங்கிக் கொண்ட கவியரசு அவர்கள்

"ஏர்மருவு பைந்தினைக் காவல்புரி மான்மகளின்
இலவுவாய் மொழிய முதினுக்கு
ஏக்கற்று நிற்கின்ற இயல்பின்"

என்று காப்பும் பருவத்தில் பாடியுள்ளார். அருணகிரிநாதர் திருப்புகழை

"சீர்மருவும் அருணகிரிவாய்மலர்ந் தருள்புதிய
தெய்வத்தமிழ்ச் சந்தமார்
செம்பாவை மிகவிழைந்து உளம்உருகு குருமலை செவ்வேள்"

என்று பாராட்டியுள்ளார்.

பாவை என்ற சொல்லைச் செம்பாவை (செம்மையான பாடல்) திருப்பாவை (திருமகள்) ஆண்டாற்பாடிய திருப்பாவை என்ற மூன்று பொருளில் பாடியுள்ளார்.

"பட்டர் பிரான் கோதை" என்ற தொடர்க்குப் பட்டர்பிரான் தவப்பயனாய் உதித்த கோதை என்று பொருள் விளக்கம் செய்து பாடியுள்ளார்.

"வாக்கு முதல்வி மகிழ்நன் அருமறையின்
கொழுந்தின் பொருளறியா
மையினாற் குட்டி யருஞ்சிறையில் வைத்த
மலர்க்கை முருகோன்"

என்று பாடியது படைப்போன், அகந்தையுரைப்ப மறையாதி எழுத்தென்று

"உகந்த பிரணவத்தில் உண்மை - புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்றுமுனம்
குட்டிச் சிறையிருந்தும் கோமானே"

என்ற கந்தர் கலிவெண்பாப் பகுதியை நினைவூட்டுகின்றது.

பிரமனைக் குட்டிச் சிறையிட்ட செய்தியைத் தாலப்பருவத்திலும்,

"பெரியபொருள் இஃது என்று உணரான் பிள்ளை எனவே எள்ளிய அப்
பிரமன்திக்குவாய் குருதிபெருகக் கக்குவாயாக்கி
அரிய சிறையில் வைத்து"

என்று நகைச்சுவை தோன்றப் பாடியுள்ளார்.

நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையில் கூறப்பெறும் ஆறு படைவீடுகளில் திருவேரகம் பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. நச்சினார்க்கினியர் மலை நாட்டு உள்ளதோர்பதி என்று குறித்தார். அருணகிரிநாதர் திருப்புகழில் சோழநாட்டுச் சுவாமிமலையே திருவேரகம் என்று பாடினார். ஆதலால் சுவாமி மலையே திருவேரகம் என்று அனைவரும் பாடினர்.

"இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான்கு இரட்டி இளமை நல்யாண்டு
ஆறினிற் கழிப்பிய அறன் நவில்கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல....
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து
ஏரகத்து உறைதலும் உரியன்"

என்பன திருமுருகாற்றுப்படையின் தொடர்கள்.

"இருமூன்று எய்திய இயல்பு பிறழாது முத்தீ
எனும் செல்வம் ஓம்பும் இயல்பார்
இருவரைச் சுட்டுபல் வேறுகுடியார் அகவை
இருபத்து நான்கு இரட்டி
அருநான்கு மறைநெறி பயின்ற பேரந்தணர்கள்
அரிய நறுமலர்கள்தூவி
அன்போடு தொழ உகந்து ஏரகத்தமர்கின்ற ஆறுமுகன்"

என்று கவியரசு திருமுருகாற்றுப்படைத்தொடர்களைப் பொருள் விளக்கம் செய்துள்ளார்.

"அடியேனுக்கும் ஐயன் எம் குருசாது
ஓதுதிருவாறெழுத்தே"

என்று குருநாதர் சாதுசுவாமிகள் ஆறெழுத்து மந்திரம் உபதேசத்ததைக் குறிப்பிட்டுள்ளார்.

சுவாமிநாதன் பிள்ளைத்தமிழ், எட்டிக்குடி முருகன் பிள்ளைத்தமிழ், மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ் ஆகிய மூன்றிலும் காப்புப் பருவத்தில் தமிழ்த்தெய்வத்தைப் பாடியுள்ளார். பேராசிரியர் சுந்தரம்பிள்ளை தான் முதன் முதலில் மனோன்மணியத்தில் தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடினார். பிள்ளைத்தமிழில் யாரும் தமிழ்த்தாயைப் பாடவில்லை. கவியரசு அவர்கள் பிள்ளைத்தமிழ்த் தலைமக்களைத் தமிழ்த் தெய்வம் காக்குமாறு பாடியுள்ளார்.

1. உலகில் உயிர்கள் தோன்றிய போது உடன் தோன்றிய மொழி.

2. என்றைக்கும் விளங்கித்தோன்றும் மொழி என்று முள தென்றமிழ் - கம்பர்.

3. ஒழுங்கான இலக்கண மரபை உடையமொழி.

4. ஓதுதற்கு எளிதான மொழி.

5. நாகரிக மக்கள் பயிலும் உயர்வான மொழி.

6. உலகமக்களுக்குப் பொதுமறையாகிய திருக்குறளைத் தந்த மொழி.

7. சிவபெருமான், திருமால், சத்தி, கணபதி, முருகன் ஆகியோர் விரும்பும் மொழி.

8. முதலைவாய் மதலைமீட்ட மொழி.

9. கொடிய விடத்தையும் அமுதாக்கும் மொழி - என்று சுவாமிநாதன் பிள்ளைத்தமிழில் தமிழின் பெருமைகளைப் பாராட்டியுள்ளார்.

1. திரிபுரம் எரித்த விரிசடை இறைவர் சங்கப்புலவரோடு இருந்து ஆய்ந்த பெருமையுடையது.

2. அவ்விறைவன் செய்த இறையனார் களவியல் என்ற அகப்பொருள் இலக்கணத்தையுடையது.

3. அரிய பொருள்கள் எல்லாம் அடங்கிய திருக்குறளாகிய வேதத்தையுடையது.

4. மணிவாசகரின் திருவாசகத்தை உடையது.

5. வேதாகமங்களின் பொருளை எளிதில் உணர்த்தும் சைவ சித்தாந்த நூல்களை உடையது.

6. உயர்ந்த தேவர்கள் விரும்பும் பாடல்களைப் பாடும் புலவர்களுக்கு அமுதமாய்ப் பயன் தருவது.

7. பேருலகில் என்றைக்கும் அழியாதது - என்று எட்டிக்குடி முருகன் பிள்ளைத் தமிழில் கவியரசு அவர்கள் தமிழின் பெருமைகளைப் பாராட்டியுள்ளார்.

திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுள் என்று இறையனார் களவியலிலும்

**"கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோ டமர்ந்து**
**பண்ணுறத் தெரிந்து ஆய்ந்த இப்பசுந்தமிழ்"**

என்று பாடியுள்ளார்.

1. அருமறைகளால் உணர்வரிய திருவடிகள் திருவாரூர் வீதியில் சுந்தரர் செந்தமிழுக்காகப் பரவையார் ஊசல் தீர்க்கப் பலகால் நடந்தன.

2. திருமகளுடன் திருமால் படுக்கையைச் சுருட்டிக்கொண்டு அடியரான கணிகண்ணன் பின் சென்றார்.

3. எம்மொழிக்கும் இல்லாத பெருமைபெறு செந்தமிழ் - என்று மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழில் தமிழின் பெருமைகளைப் பாராட்டியுள்ளார்.

**"ஐவகை எனும் பூதம் ஆதியை வருத்து, அதனுள்**
**அசரசர பேதமான**
**யாவையும் வகுத்து நல்லறிவையும் வகுத்துமறை**
**ஆதிநூலையும் வகுத்துச்**
**சைவமுதலாம் அளவில் சமயமும் வகுத்து..."**

என்று தாயுமான சுவாமிகள் பாடியதை,

**"ஐவகை எனும் பூதம் ஆதியை வகுத்து அதனுள்**
**அசரசர பேதமான**

யாவையும் வகுத்து மறையாதியும் வருத்தனை எம்
ஐயமற்று அவை ஓதவோ"

என்று செங்கீரைப் பருவத்தில் எடுத்தாண்டுள்ளார்.

கவியரசு அவர்கள் திருவாசகத்தில் மிக ஈடுபாடு உடையவர்கள். தாம் பாடிய நூல்களில் மணிவாசகரையும் அவர்தம் திருவாசகத்தையும் மனமுருகப் பாராட்டியுள்ளார்.

**"நானார்என் உள்ளமார் ஞானங்கள்ஆர் என்னை யார் அறிவார்**
**வானோர் பிரான் என்னை ஆண்டிலேன்"**

என்பது மணிவாசகர் வாக்கு.

**"நானார் என் உள்ளமிதுதானார் முளைத்த சில**
**ஞானங்களார் என்னையும்**
**நான் என்று உணர்த்தியவர் யார் உம்பர் தம்பிரான்**
**ஞாலத்தின் மேலருளினால்**
**தானாக வந்து தயை செய்திலான் எனில் என்று**
**தம்மையுணர் பெரியர்"**

என்று மணிவாசகரைத் 'தம்மையுணர்' பெரியர் என்று பாராட்டியுள்ளார்.

**"அவஞான நெறிகள் நவநவமாக அறைகின்ற**
**அறிஞர்மலி கலியுலகிலே"**

பயனில்லாத வீணான அறிவு வழிகளையே புதிதுபுதிதாகக் கற்பித்துக் கூறும் அறிஞர்மிக்க கலியுலகம் தற்கால உலகைச் சுட்டியுள்ளார். அவர்கள் கூறுகின்ற தவறான வழிக்கு எம்முடைய உள்ளம் செல்லுமா? பசித்தாலும் சிங்கம் புல்தின்னுமா? என்று உறுதிப்பாட்டைப்பாடியுள்ளார்.

**"அவர்கள் மொழி தவறுநெறி எமதுளத்தேறுமா**
**அரியேறு புல்தின்னுமோ"**

**தன்மேல் நலியும் பசிபெரிதாயினும்**
**புன்மேயதாகும் புலி** (70)

என்ற பழமொழிப் பாடலை விளக்கம் செய்துள்ளார்.

தவநெறியை மேற்கொள்ளாவிட்டாலும் சிறப்பில்லாத சால்பில்லாத வழி செல்வோர்க்காக உழைக்க மாட்டோம். சரியை, கிரியை முதலிய நெறிகளை இகழ மாட்டோம். உன் அடியார் சார்பை எக்காலத்திலும் இகழ மாட்டோம்.

"தவஞான நெறி பயில கிற்றிலேம் ஆயினும்
சால்பிலா நெறியுழையேம்
சரியை கிரியாதி இகழேம் உன் அடியார் அடியர்
சார்பை ஒருகாலும் இகழேம்"

என்று தம் கொள்கைகளைப் பாடிய கவியரசு அவர்கள்.

"உயர்ஆகமத்தின் முடிவாக மெய்கண்டமுனி
உலகுய்ய வாய்மலர்ந்த
சிவஞான போதமுறை அநுபூதி கைவரவொர்
செங்கீரை ஆடியருளே"

என்று முருகப்பெருமானிடம் சிவஞானபோத அநுபூதி வேண்டும் முறை உளத்தைக் கனிவிக்கும் உயர்ஞானச் செய்தியாகும்.

சப்பாணிப் பருவம் "பன்மார்க்க நூலெல்லாம்" எனத் தொடங்கும் பாடலிலும் பயனற்றவைகளை நீக்கி, முப்பொருளை ஆராய்ந்து, தீய நெறி நீங்கி அறவழி நின்று புண்ணிய வழியில் அழிவில்லாத செல்வத்தை ஈட்டி, தூயதொண்டு நிலை கைவந்து இரண்டன்ற சுத்த அத்துவிதநிலையைக் கொண்ட சன்மார்க்க வழியைமேற்கொண்ட தொண்டர்க்குக் குலதெய்வமே (38) என்று தம் கொள்கைப் பிடிப்பை ஆழமாகக் காட்டியுள்ளார்.

"பதியும் பசுபாசமும் உணர்ந்தோர் பகரும் ஞானக் கலைமுழங்கப்
பழுதிலடியார் சிவபூசை பயிலும் மணிநாமுழங்க என்றும்
புதிய தமிழின் துறைமுழங்கப் புலவர்புகழ் எங்கணும் முழங்க...
முழக்கியருள்க சிறுபறையே"

என்பன சைவசித்தாந்தத்தின் பாலும் சிவபூசையின் பாலும் தமிழின்பாலும் கவியரசு அவர்கள் கொண்டிருந்த ஆராக்காதலுக் காதாரமாகும்.

தமிழின் இனிமை சபைகளெல்லாம்
சாந்தநிலைமை சிந்தையெல்லாம் (94)

என்ற தொடர்கள் எத்தகைய ஆழமான பொருளுடையன.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே"

என்ற திருஞானசம்பந்தர் பாடலுக்குப் பொருள் கூறுமுறையில் எட்டிக்குடிமுருகன் பிள்ளைத்தமிழ்க் காப்புப் பருவத்தில்

"வேத நான்கின் மெய்ப்பொருளாய்
வீட்டின் நெறியை விளக்குவதாய்
விளம்பு மறைகட்கு அரசாகி
விண்ணும் மண்ணும் எண்ணுவதாய்க்
காத லாகி யோதுபவர்
கடல்நேர் பிறவிகடத்துவதாய்க்
கடையேன் உளத்தும் பயில்கின்ற
கடவுள் எழுத்து ஐந்து" 6

என்று பாடியுள்ளார்.

"திருத்தப் புவனங்கள் ஈன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில் ஏறி அறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழும்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென்று ஓதும் குவலயமே" 5

என்பது அருணகிரியாரின் கந்தரலங்காரப் பாடல்.

"திருந்தப் புவனங்கள் ஈன்றவள்தன்
திருமா முலையுண்டு அகங் குளிர்ந்து
திரைவாரி திசேர் சரவணத்தில்
செவ்விப் பூந்தொட்டிலில் அமர்ந்து
மருந்திலினிய அறுவர்முலை
மாந்த விரும்பி வாரியழ
வானோர் பகையாம் சூரரழ
மாயம் பெருத்த குன்றமழ
விரும்பிப் படைத்த மாயையழ
விம்மிவிம்மியழுங் குழந்தாய்"

என்று தாலப் பருவத்தில் அலங்காரப் பாடலை அலங்காரம் செய்துள்ளார்.

பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
சொல்லால் பொருட்கு இடனாக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள் (268)

என்று பவணந்தி முனிவர் செய்யுளுக்குச் செம்மையான இலக்கணத்தை இயற்றியுள்ளார். இன்று பாடல் இயற்றுவோர் பாடல்களில் இத்தகைய இயல்புகளைக் காண்பது அரிது.

"செஞ்சொல் ஒன்றும் இல்லாமல்
சீரும் கட்டும் சேராமல்
சிறந்த பொருளும் பயவாமல்
செவ்வே சந்தி பொருந்தாமல்
நெஞ்சம் கவரும் அணியின்றி
நிறைந்த புலமை இல்லோர்கள்
நேர்ந்த வாறு கீறும்பா நிகர யாம்செய் சிற்றில்லம்"

என்று சிற்றில் பருவத்தில் செம்மையான சொற்களில்லாமல் சீரும் தளையும் சேராமல், சிறந்த பொருளும் இல்லாமல், இலக்கணச் சந்திகள் பொருந்தாமல் உள்ளம் கவரும் செய்யுட்குரிய அணிகள் இல்லாமல் புலமையில்லாதவர்கள் பாடும் பாடல்கள் போன்ற எம் சிற்றில் என்று சிறுமியர்கள் கூறுவதாக அமைந்துள்ள கற்பனைத்திறம் சுவைத்து மகிழத்தக்கது.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பிள்ளைத்தமிழில் குருபக்தி மிகச் சிறப்பாக அமைந்துள்ளது, காப்புப் பருவத்தில்

"மும்மைப் புனல்சேர் கடல்பருகி
மூன்று தமிழின் மழைபொழிந்து
முகில்தோய் விந்த மலையினொடு
மோவா வினையின் மலையடக்கிச்
செம்மை நெறிக்குத் துணையாகித்
தீயநெறியைத் தூர்த்தொழித்துத்
திகழும் குறுமா முனியே! சீர்
சேர்இ ராமா நந்தா"

என்ற பாடலில் அகத்திய பெருமைகளைக் கூறி அகத்தியரே இராமானந்த குருவாக வந்து விளங்குவதாகப் பாடியுள்ளார்.

ஊழிபூழி உயர் கயிலை ஓங்கல் (தாலப்பருவம் 4) என்ற பாடலில் ஊழிதோறூழி முற்றும் உயர் பொன் நொடித்தான்மலை என்ற தொடருக்குப் பொருள் கண்டுள்ளார்.

"ஞான அருணகிரி நாதன்
நவின்ற சந்தத்திருப்புகழ்ப்பாச்
செவியா ரமுதத் தினுக் கேற்பச்
சீராயத் தாளமிடவென....
குருவே! கந்தசாமி! குணக்
குன்றே கொட்டுக! சப்பாணி" 3

என்று அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்களைப் புகழ்ந்து அப்பாடலின் சந்தத்திற்கேற்பத் தாளம் போடுதல் போலச் சப்பாணி கொட்டுக என்று பாடியுள்ளார்.

"காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணில்லாக் குழவியைப் போல்
கட்டுண்டு இருந்த எமை வெளியில்விட்டு..."

என்ற தாயுமானசுவாமி பாடல் தொடரை

"காரா ணவமாம் இருட் சிறையில்
கண்ணில் லாமல் கிடந்தோமைக்
கலந்து மாயா உலகத்தைக்
காணக் கண்டுசெய்தாய்"

என்று வருகைப் பருவத்தில் பாடியுள்ளார்.

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென" என்ற சிவஞானபோதத் தொடருக்கு,

"ஐந்து பொலாத புலச்சிறுவேடர்
அலைப்பினுள் அலையாமே" (சிறுதேர் 4)

என்று பொருள் விளக்கம் பாடலில் புலப்படப்பாடியுள்ளார்.

மங்கையர்க்ரசியார் பிள்ளைத்தமிழ் முதல் பாடலில்

மங்கையர்க்கரசியார் திருஞானசம்பந்தரை மதுரைக்கழைத்த காரணத்தைக் கூறித் திருஞானசம்பந்தரை ஞானசம்பந்த சிவசூரியன் என்று பாடியுள்ளார்.

"பொங்குதிரு வெண்ணீற்றின் ஒளிபரவ, அமணவிருள்
பொன்ற அடியவர்கள் இதயப்
போதவிழ ஞானசம்பந்த சிவசூரியன்
புகழ்மதுரை புகவழைத்த
மங்கையர்க்கரசியை வளவர்கோன் பாவையை
வரிவளைக்கைம்மானியை
வழுதியர்கள் குடிதழைய வந்த அருளமுதத்தை
வாழ்த்தும் என்தமிழ் தழையவே!"

என்ற பாடலில் 1. திருநீற்றின் வெண்மையான ஒளிபரவவும், 2.அமணராகிய இருள் கெடவும், 3. அடியவர் உள்ளத்தாமரை விரியவும் மதுரைக்குத் திருஞானசம்பந்த சிவசூரியனை அழைத்தவர் மங்கையர்க்கரசியார் என்று பாடியதில் தேவாரத்தில் வரும் 1. மங்கையர்க்கரசி, 2. வளவர்கோன் பாவை 3. வரிவளைக் கைம்மானி ஆகிய தொடர்களைக் கொண்டே பாட்டுடைத் தலைவியைப் பாராட்டிய பாங்கு வியந்து போற்றுதற்குரியது. பாண்டி மாதேவி பங்கயச் செல்வி என்று பின் வரும் பாடல்களிலும் தேவாரத் தொடர்களைக் கொண்டே பாராட்டியுள்ளார்.

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு" என்ற திருநீற்றுப் பதிகத்தில் கூறப்பெறும் திருநீற்றின் பெருமைகள் முழுவதையும்

"பூசமிக இனியதாய்ப் புண்ணியம் தருவதாய்ப்
பொய்யாத மறைபுகழ்வதாய்ப்
போதமிகு விப்பதாய் ஏதம் அகல்விப்பதாய்ப்
புத்தி முத்திக்கு வித்தாய்
நேசமிகு விப்பதாய் ஆசையை அறுப்பதாய்
நெஞ்சவிருள் நீக்கிரவியாய்
நெற்றிக் கொரணியாய் திருவாலவாய் முதல்வன்
நீற்றின் ஒளிபோற்றல் செய்வாம்"

என்று தொகுத்து விளக்கம் செய்துள்ளார். அதே பாடலில்

"தேசுமிகு முத்தமும் சந்தனத் தேய்வையும்
திருநீறு மார்பணிந்தே
சிவனடிகள் முடிமீது மலர்வித்தகொடி"

என்று பிள்ளைத்தமிழ்த்தலைவியைக் குறிப்பிட்டுள்ளார்.

"முத்தின்தாழ் வடமும் சந்தனக் குழம்பும்
நீறுந்தன் மார்பினில் முயங்கப்
பத்தியார் கின்ற பாண்டி மாதேவி"

என்ற திருஞானசம்பந்தர்வாக்கே அவ்வாறு பாட அடிப்படை ஆயிற்று. பிள்ளைத்தமிழில் பலவிடங்களில் பாண்டிநாட்டில் சைவம் தழைக்கச் செய்தது, பாண்டியனுக்கு இனிமை தந்தது, வெண்ணீற்றொளி பரப்பியது, அங்கயற்கண்ணம்மைத் திருத்தொண்டு செய்தது அடியார்களிடத்தில் அன்பு கொண்டது முதலியவற்றை விரிவாகப் பாடியுள்ளார்.

அகரம் ஆயிரம் அந்தணர்க் கியிலென்
சிகரம் ஆயிரம் செய்து முடிக்கிலென்
பகரும் ஞானி பகலுண் பலத்துக்கு
நிகரிலை என்பது நிச்சயந் தானே (1860)

என்பது திருமந்திரப்பாடல்.

"அகரமொரு நூறாயிரம் செய்து வேள்விபயில்
அந்தணர்க்கு ஈவது எனினும்
ஆலயம் சிகரம் உளவாக ஒருநூறா
யிரம்செய்வது எனினும் அரனார்
நிகரறுபொன் அடிமலர்கள் அகமலரில் வைத்தேத்தும்
நியதிதவறாத தொண்டர்
நீள்பசிக்கு ஒருவேளை உணவு தருவதனுக்கு
நிகரில்லை என்பதோர்ந்து"

அகரம் - அக்கிர கிருகம், இன்றைய வழக்கில் அக்கிரகாரம்.

1. அந்தணர்க்கு ஆயிரக்கணக்கான உயர்ந்த வீடுகளைத் தருவதைக்காட்டிலும், 2. கோபுரத்துடன் கூடிய கோயில்கள் ஆயிரக்கணக்கில் அமைப்பதைக் காட்டிலும் சிவஞானிக்குப் பகல் உணவு அளிப்பது உயர்ந்த அறச்செயல் என்பது கருத்து பகரும்

ஞானி என்று திருமூலர் குறிப்பிட்டார். இறைவன் திருவடித்தாமரைகளை உள்ளமாகிய தாமரை மலரில் வைத்துப் போற்றும் நியதி தவறாத தொண்டர் என்று ஞானிக்கு விளக்கம் தந்துள்ளார். நீராடற் பருவத்தில் "கடம் பொழிகவுட் சிறு விழிக்கும்" எனத் தொடங்கும் பாடலில் வையை நதிக்கும் சிவபெருமானுக்கும் சிலேடையாகவும் "மாமுகமார்மலை" எனத் தொடங்கும் பாடலில் வையை நதிக்கும் உமாதேவிக்கும் சிலேடையாகவும் பாடிய திறம் கவியரசின் பாவமைக்கும் கருத்தாற்றலைக் கவினுறக் காட்டுகின்றது.

"புகலிவரு தமிழ்விரகர் புகழ்மதுரை நகரிறைவி
பொன்னூசல் ஆடியருளே"

என்ற மகுடம் பிள்ளைத்தமிழுக்கு மகுடமாய் அமைந்துள்ளது.

திருச்சுழியல் என்ற தலத்தில் வீற்றிருந்து அருள்புரியும் அருள்தருதுணைமாலையம்மையின் மீது பாடப்பெற்றது துணைமாலையம்மைப் பிள்ளைத்தமிழாகும். சிறந்த பெருங்கவிஞர் ஒருவர் முன்பே 1. காப்புப் பருவம், 2. செங்கீரைப் பருவம், 3. தாலப்பருவம், 4. சப்பாணிப்பருவம், 5. முத்தப்பருவம் ஆகிய பருவங்களை முழுவதுமாய் வருகைப் பருவத்தில் முதல் ஆறுபாடல்களுமாய்ப்பாடியிருந்தார். அவை சொற்செறிவும் பொருட்செறிவும் உடையன. திருக்கோயில் அன்பர்களும் அறங்காவலரும், நிர்வாகத்தினரும் வேண்ட எஞ்சிய பகுதிகளைக் கவியரசு அவர்கள் பாடி நிறைவு செய்துள்ளார்.

1. கயிலையில் மலைமகளாய், 2. காசியில் விசாலாட்சியாய், 3. கன்னியாகுமரியிற் கன்னிபகவதியாய், 4. தில்லையில் சிவகாமியாய், 5. காஞ்சியில் காமாட்சியாய், 6. திருத்தோணிபுரத்தில் பெரிய நாயகியாய், 7. அவிநாசியில் கருணாம்பிகையாய், 8. பேரூரில் மரகதமாய் எங்கெங்கும் இறைவனுக்கேற்ற முறையில் மணியின் ஒளிபோல் அமர்ந்த துணை மாலையம்மையே வந்தருள்க என்று வருகைப் பருவத்தில் பாடியுள்ளார்.

இன்று ஒலி நாடாக்களில் பலதலங்களைக் குறிப்பிட்டு அங்குள்ள அம்மையின் பெயர்களைக் குறித்துப் பாடும் இசைப் பாடல்கள் பல வந்துள்ளன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே

பிள்ளைத்தமிழில் அவ்வாறு பாடிய கவியரசு அவர்களின் கவித்திறத்தை என்னென்பது? திருக்கயிலையில் தொடங்கிச் பேரூரில் நிறைவு செய்துள்ளார்.

"முதலை துய்த்தசேய் நாவலூரன்
பணியில் நமனுய்க்க வருபுக் கொளியின்
அடியேங்கள் பணிகொள் கருணாம்பிகை"

என்று கருணாம்பிகைமேல் உள்ள பக்தியை வெளிப்படுத்தியுள்ளார்.

"இறைவனமர் பரிசினுக்கேற்ற படியாய்
மணியின் ஒளிபோல அமர் துணைமாலை அம்மையே"

என்று பொன்னூசல் பருவத்திலும் தாதான்மியத்தைப் பாடியுள்ளார்.

"எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு
இங்கேயென் றருள்புரியும் எம்பெருமான் எருதேறிக்
கொங்கேயும் மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்துறையும்
சங்கேயொத் தொளிர்மேனிச் சங்கரன்தன் தன்மைகளே"

என்பது திருஞானசம்பந்தர் தேவாரப் பாடல்.

"எங்கேனும் யாதாய்ப் பிறந்திடினும்
அடியார்கள் இடருற்ற போதிரங்கி
இங்கே எனச்சொல்லி முன் நிற்பன்
இறைவன் எனும் எங்கள் தமிழ்விரகன் மொழி" (54)

என்று அப்பாடலைப் பாராட்டிப் பாடியுள்ளார்.

வருகைப்பருவம், அடுத்த பாடலில்

"பிரமாபுரத்துவரும் ஒருசிறுவன் அமுதுண்டு
பெருநெறித்தமிழ் செய்வித்தாய்"

என்றும் பாடியுள்ளார்.

அம்புலிப்பருவத்தில் முதல்பாடலில் திருநாவுக்கரசருக்கும் சந்திரனுக்கும் சிலேடையாகவும் இரண்டாம் பாடலில்

திருஞானசம்பந்தருக்கும் சந்திரனுக்கும் சிலேடையாகவும் பாடிய திறம், சொல்லாட்சி முதலியன அம்புலிப் பருவம் கவியரசு அவர்களுக்கு எளிமையாக வருவதைக் காணலாம்.

1. குமரகுருபரர் பாடிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

2. கவிராச பண்டிதர் மொழி பெயர்த்த சவுந்தரிய லகரி

3. அபிராம பட்டர் பாடிய அபிராமியந்தாதி

4. போரூர்ச் சிதம்பர சுவாமிகள் பாடிய மீனாட்சியம்மை கலிவெண்பா

ஆகிய அருட்பாடல்களைப் பாடுவோர் மனதில் நினைந்த வரத்தை உதவுகின்ற திருச்சுழியல் அன்னையே பொன்னூசல் ஆடியருளே என்று அருட் பாடல்களைப் பாடிய பாவலர்கள் பாங்கினைப் பாராட்டியுள்ளார்.

1. என் உளமேவும் தமிழ் விரகன் உலகுய்யமறை பாடினான்.

2. உன் நாவாயமுதுண்ட காளமேகப்புலவர் கவிமழை மொழிந்தார். இவற்றை அடியேன் அறிவேன், பேசுகின்ற சொற்கள் எல்லாம் உன்னுடைய திருவருளே என்று உயர்ந்த நூல்கள் கூறும், ஆதலால்,

"எனது கவியும்
புண்ணியம் பெற உன் திருச்செவிமடுத்து அம்மை
பொன்னூசல் ஆழயருளே"

என்று நிறைவு செய்துள்ளது இப்பிள்ளைத்தமிழின் தனிச் சிறப்பாகும்.

திருநிலைநாயகி பிள்ளைத்தமிழ்த் தொடக்கப் பாடலே

"திருமார்பன் முதலான தேவர்கள் வணங்கும்பர
சிவனே மகாதேவன்"

என்று தொடங்குகிறது.

"திருமாா்பன் முதலான தேவர்க்கெலாம் மறையோன் சிவனே ஆரெமன்று
ஒருவாய்மை மறைகரைந்தது உண்மை"

என்று பேரூர்ப் புராணத்தில் கச்சியப்ப முனிவர் பாடியதை எடுத்தாண்டு விளக்கஞ் செய்துள்ளார்.

"பூவார மலிபொய்கை யின்கரையின் நின்றழுதே
பூசுர இளங்குழந்தைப்
போனக மெனச் சகல கலைஞான அமுதினைப்
பொற்கிண்ண மோடளித்துத்
தேவாரம் அக்குழவி யோத மணவாளனொடு
திகழ்தோடுடைச் செவியின் வாய்த்
தேக்கியருள் உலகன்னை (4)

என்பதில் நம்பியாண்டார் நம்பி சேக்கிழார் பெருமான், சிவப்பிரகாசர் ஆகியோர் பாடியவற்றைச் சுருக்கித்தந்து பாடிய பான்மை பாவடிக்கும் மேன்மையைக் காட்டுகின்றது.

"ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளும்நல் தாரமும் ஆமே" (1178)

என்று திருமூலர் கூறினார்.

எம்பெருமான் இமவான்மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன்தகப்பன்
தமையன் எம் ஐயன் (207)

என்று மணிவாசகர் பாடினார்.

உலகத்தைப் படைக்கச்சிவமும் சத்தியுமான போது சத்திக்குச் சிவம் கணவனாகின்றான். சத்தி தத்துவத்திலிருந்து சதாசிவம் தோன்றுவதால் மகன் ஆகின்றான். சிவதத்துவத்திலிருந்து சத்தி தோன்றுவதால் தகப்பன் ஆகின்றான். முதலில் தோன்றியது சிவதத்துவம், பின்தோன்றுவது சத்தி தத்துவம் ஆதலால் சத்திக்குச் சிவம் தமையன் ஆகின்றான் இவற்றையெல்லாம் கருத்திற்கொண்டு கவியரசு அவர்கள்

ஆளுமறையோலமிட்டு இன்னம் அறியாதவர்க்கு
அன்னை மகள் மனை தமக்கை
ஆகமமாகி உயிராகி (6)

என்று காப்புப் பருவத்தில் பாடியுள்ளார். குமரகுருபரர்

அபிராமபட்டர் ஆகியோரும் சத்தியைச் சிவத்திற்கு தாயாகவும், தமக்கையாகவும், மனைவியாகவும் மகளாகவும் பாடியுள்ளனர். பேராசியர் திருக்கோவையார் உரையில் தத்துவமுறையில் விளக்கம் செய்துள்ளார்.

செங்கீரைப்பருவத்தில் செங்கீரை ஆடுக என்பதற்குப் பலவாறாகப் பொருள் கூறுவது உண்டு. செம்மை+நீர் - எனக் கொண்டு செம்மையானசொல் என்பதில் எதுகைமோனை எதுவும் இல்லாத தொடையைச்செந்தொடை என்பதைப் போல எவ்விதப் பொருளும் பலவாத சொல்லைச் செங்கீரை என்பது மங்கல வழக்கு எனக் கொள்வது ஒருமுறை. செங்கீரைச் செடிபோலத் தலையை இருபுறமும் அசைத்தாடுதல் செங்கீரை ஆடுதல் எனப் பொருள் கொள்வது மற்றொரு முறை.

1. அடியராகிய எம்மைதாய்வயிற்றில் பிறக்கச்செய்வாயா?

2. இனிவரும் பிறப்புக்களில் துன்பங்களைத் தந்து தண்டனைதருவாயா?

3. மயக்கும் ஐம்பொறிகள் வழியிலே உழலச் செய்வாயா?

4. பெண், பொன், மண் என்ற மூவாசையில் துன்புறுத்துவாயா?

5. உன்திருவடி பரவும்அன்பில்லாதவர்கூட்டத்தில் சேர்ந்து உன்னைமறக்கச் செய்வாயா?

என்ற வினாக்களுக்குப்பதில் கூறுவாய் என்ற போது இல்லை என்றுதலையசைத்துச்செங்கீரை ஆடுகஎன்று கேட்பது கவியரசு அவர்களின் மிகச்சிறந்த கற்பனையாகும்.

"நீதியை புரிந்துமொழிக எனும் வினாவுக்கு எதிர்
நிகழ்த்தி மறைவிடை விடுதல் போல்
செங்கீரை ஆடியருளே"

என்பது பாடற் பகுதி.

சீவகசிந்தாமணி குணமாலையார் இலம்பாகத்தில் சுண்ணப்பொடியில் வரும் போட்டியில் குணமாலையார், சுரமஞ்சரியார் ஆகியோர் சுண்ணப்பொடிகளைத் தூவி விட்டான்

சீவகன். சுரமஞ்சரியார் சுண்ணப் பொடிகள் தீயன ஆகலின் வண்டுகள் உண்ணவில்லை. குண மாலையார் சுண்ணம் நல்லன ஆகலின் வண்டுகள் விரும்பி உண்டன என்ற செய்தி வருகிறது.

> "தூவின் நிலமேல் விடாது வரிவண்டுகள்
> சுழன்று துய்க்கும் சுண்ணம்"

என்று கவியரசு அவர்கள் நீராடற் பருவத்தில் பாடியுள்ளார். அதே பாடலில் "துகில் காம்பு நேத்திரங்கள்" என்று பாடியுள்ளார். "காம்பினொடு நேத்திரங்கள் தந்தருள வேண்டும்" என்று சுந்தரமூர்த்தி நாயனார் பாடியதில் காம்பு நேத்திரங்கள் பட்டு வகையாகும். திருவாசகத்தில் "காம்பணிமின் உலக்கை எல்லாம்" என்று வருகின்றது. ஆழ்வார் பாடல்களிலும் காம்பு நேத்திரம் பட்டுவகை என்று வருகின்றது. வழக்கற்ற பழைய சொற்களைக் கச்சியப்ப முனிவர் மீண்டும் பாடல்களில் வைத்துப் பாடியுள்ளார். கவியரசு அவர்களும் வழக்கற்ற காம்பு நேத்திரம் என்ற சொற்களைப் பாடலில் வைத்துப் பாடியுள்ளார். சொல்நயம் கவிநயம், கற்பனைநயம், சந்தக்குழிப்பு, முன்னோர் மொழிபொருளைப் பொன்னே போல் போற்றல் ஆகியன நிறைந்த கலைப் பெட்டகம் கவியரசு அவர்களின் பிள்ளைத்தமிழ் நூல்கள்.

# நூலறிமுகம்

"நின்னை நினைக்க நினைந்தாய் நிரந்தரமும்
உன்னை அடியேன் உளம் வைத்தாய் - என்னில்
எனக்கினியான் ஆனாய் எழிற்சுழியல் நாதா
உனக்கினியான் செய்வதுரை"

திருச்சுழியல் நம்பியாரூரால் பாடப்பெற்ற பாண்டி நாட்டுத் திருத்தலங்களில் ஒன்று. இத்தலம் இராமநாதபுரம் மாவட்டம் விருதுநகர்வட்டத்தில் உள்ளது. மூர்த்திதலதீர்த்தச்சிறப்புக்களைக் கொண்டது. தங்கையிற் பொற்செண்டும் திருமுடியிற் சுழியற்கொண்டையும் கொண்டு இறைவன் நம்பியாரூரரின் கனவில் தோன்றி கானப்பேர் யாம் இருப்பது எனக் கூறி அவரை இத்தலத்திற்கு அழைத்துச் சென்றார். இரமண மகரிஷியவர்களின் அவதாரத்திருத்தலம் திருச்சுழியல்.

இத்தலத்திற்குத் தலபுராணமும் பல சிற்றிலக்கியங்களும் உண்டு.

இந்நூலை முதன்முதல் 1939ல் பதிப்பித்தவர் தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள். முன்னுரையில் இப்பிள்ளைத்தமிழ் அச்சேறிய வரலாற்றைக் குறித்துள்ளார். அவருடையதந்தையார்வடக்குப்பட்டுத.சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் மானாமதுரையில் மாவட்ட முனிசிப்பாகப் பணியாற்றுகையில், திருப்புகழ் ஏடுகளைத் தேடித் திருச்சுழியல் சென்றபோது துணைமாலையம்மன் பிள்ளைத்தமிழ் குறைநூல் ஒன்று கிடைத்தது. பல ஆண்டுகள் தேடியும் முழுநூல் கிடைக்கவில்லை. 56 பாட்டுக்களேயுள்ள இக்குறை நூலை, அதன் பொருணயம் சொன்னயம் கருதிப் பிள்ளையவர்கள் பதிப்பித்தார்கள்.

கவியரசு அவர்களின் நண்பரும் தமிழ்நாடு இந்து அறநிலைய துணை ஆணையராகப் பணியாற்றியவருமாகிய திரு. டி.எச். விவேகாநந்தம் பிள்ளையவர்கள் இக்குறைநூலை, கவியரசு அவர்களைக் கொண்டு பாடுவித்து நிறைநூலாக்கி 1964ஆம் ஆண்டு இராமநாதபுரம் சமஸ்தானம் தேவஸ்தான வெளியீடாக வெளியிட்டார்கள்.

இந்நூலில் வருகைப் பருவத்தில் உள்ள 56ஆம் பாடல்வரை பெயர் தெரியாத புலவர் ஒருவராற் பாடப் பெற்றவை. 57 முதல் 100 முடிய கவியரசு அவர்கள் பாடி நிறைவு செய்யப்பட்டவை.

# பதிப்புரை

தவத்திரு. கஜபூசைச் சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையத்தின் சார்பில் 08-6-2011 அன்று தெய்வத்திரு. ப.சு. சின்னசாமிக்கவுண்டர் அவர்களின் நினைவு அறக்கட்டளையின் நான்காம் ஆண்டு விழாவில் "**கவியரசு அவர்களின் முருக இலக்கியங்கள்**" எனும் தலைப்பில் சிரவை ஆதீனகர்த்தர் தவத்திரு குமரகுருபர சுவாமிகளின் முன்னிலையில் உரையாற்றும் பேறு கிட்டியது. அவ்வுரையின்போது கவியரசு அவர்களுக்கு சிரவை ஆதீனம் இரண்டாம் குருமகா சந்நிதானங்களிடம் இருந்த கேண்மை இடம் பெற்றது.

நன்றியுரைவழங்கிய ஆதீனக்கவிஞர்திரு. ப.வெ. நாகராஜன் அவர்கள் கவியரசுவின் படைப்புக்களெல்லாவற்றையும் திரட்டி வெளியிட வேண்டும் என்ற தம் விழைவினை வெளிப்படுத்தினார். வாழ்த்துரை வழங்கிய ஆதீனகர்த்தர், புலவரின் விழைவினைச் செயல்படுத்தத் திருவுளம் பற்றி ஆணை பிறப்பித்தார்கள். சந்நிதானங்களின் திருவாணையின் வண்ணம் இந்நூல்கள் வெளிவருகின்றன.

முதலில் அனைத்து நூல்களையும் திரட்டி ஒரே புத்தகமாக வெளியிடும் எண்ணமிருந்தது. புத்தகம் பெரிதாகவும் கனமாகவும் இருந்தால் படிப்பதற்குத் தோதாக இராது. எனவே தனித்தனி நூலாக வெளிவருகின்றது. இந்த வரிசையில்,

1. பழநியாண்டவர் மயில்விடுதூது.
2. தடாகம் திருமுடிசுவாமிகள் நெஞ்சுவிடுதூது
3. திருப்பேரூர்க் கலம்பகம்.
4. எட்டிகுடி முருகன் பிள்ளைத்தமிழ்.
5. திருவேரகம் சாமிநாதன் பிள்ளைத்தமிழ்
6. மங்கையர்க்கரசியார் பிள்ளைத்தமிழ்
7. திருச்சுழியல் துணைமாலையம்மன் பிள்ளைத்தமிழ்.
8. சீகாழி திருநிலைநாயகி பிள்ளைத்தமிழ்.
9. தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பிள்ளைத்தமிழ்

ஆகிய நூல்கள் வெளி வருகின்றன.

கவியரசு அவர்களின் நூற்றாண்டு 2002ல் நிறைவுற்றது. அவருடைய அன்பிற்குரிய தலைமை மாணாக்கரும் என்னுடைய பெருமதிப்பிற்குரிய புலமைமிக்க பல்துறை அறிஞரும் நண்பருமாகிய சித்தாந்த ஞான சரசுவதி முனைவர் ந. இரா. சென்னியப்பனார் அவர்கள் கவியரசு அவர்களின் நூற்றாண்டு விழாவினை நடத்த வேண்டும், அவருடைய நூல்களைத் திரட்டிப் பதிப்பிக்க வேண்டும் எனப் பலமுறை வலியுறுத்தினார்கள். நூல்களைப் பதிப்பிக்கும் முயற்சியினையும் மேற்கொண்டார்கள். அவர்கள் அளித்துள்ள அணிந்துரை இவ்வெளியீட்டினைச் சிறப்பிக்கின்றது.

இந்நூல்களின் வெளியீட்டினை ஊக்குவித்த திருக்கயிலாய பரம்பரை திருப்பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களின் திருவடிகளுக்கு நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல்களை அச்சேற்றி வெளிக்கொணரத் திருவுளம் பாலித்த சிரவையாதீனம் தவத்திரு குமரகுருபர சுவாமிகளின் திருவடிகளுக்கு என் வணக்கம்.

இம்முயற்சியில் எல்லாவிதத்திலும், துணைநின்ற சிரவையாதீனக் கவிஞர், பெரும்புலவர் திருமிகு ப.வெ. நாகராஜன் அவர்களுக்கும், அணிந்துரை வழங்கிச் சிறப்பித்த பேராசிரியர் திருமிகு. முனைவர் ந.இரா. சென்னியப்பனார் அவர்களுக்கும் நன்முறையில் அச்சிட்டு வழங்கிய சௌமி அச்சக உரிமையாளர் தே.திருஞானசம்பந்தன் அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

- பதிப்பாசிரியர்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருச்சுழியல்

# துணைமாலையம்மை பிள்ளைத்தமிழ்

## 1. காப்பு பருவம்

### விநாயகர்

திருப்பொலி யருட்பவள வெற்பனைய முக்கட்
செழுந்தே னளித்தசெம்பொற்
சிறுபதப் பெருவயிற் றைங்கரத் திருசெவித்
திறலின்மிக் கோர்மருப் பொண்
கருப்பொலி முகிற்கட் கருணைமுத் தகைவிழிக்
கவினுமா ணிக்கமோலி
கனகப் பொருப்பின்மெய்க் கதைபொறித் திடுபுழைக்
கைக்களிற் றைத்துதிப்பாம்;
மருப்பொலி குழற்றுவ ரிதழ்க்கனி மொழிக்கலா
மதிவாண் முகத்தோதிமம்
மயிடன்முடி யிடறியடி யவரிடரை யடருநகை
மரகதப் பூம்பைங்கொடி
தருப்பொலி பொழிற் றிருச் சுழிகர புரிக்கிறைவர்
தன்பா லுவந்த செல்வம்
தண்ணளி தருங்கயற் கண்ணி துணைமாலை யென்
தாயிசைத் தமிழ் வாழ்கவே. 1

### திருமால்

தேர் கொண்ட மணிவீதி திகழ்திருச் சுழியனகர்
திருமேனி நாதரொருபாற்
செங்கமல முட்குமுத மைக்குவளை குமிழ்முல்லை
செறிதரப் பூத்து வாய்த்த
பார்கொண்ட சிற்றாற் பசுந்தளிரி னெண்ணிலாப்
பகிரண்ட கோடி காய்த்துப்
பைந்தாளின் முப்பலஞ் செய்துணை மாலை யாம்
பைங்கொடியை இனிது காக்க;

நீர் கொண்ட திரையமு தளித்துவிண் காத்திடர்கள்
நீக்கியீ ரைந்து வடிவாய்
நின்றுமண் காத்தரவி னுலகுதன் பாயலால்
நிலைபெறக் காத்த காவற்
கார்கொண்ட திருவுருப் பொன்கொண்ட மார்பனற்
கடிகொண்ட துளபமுடி மெய்க்
கருணைக் கடற்குண்மேற் கொண்டுமலர்க்கின்ற செங்
கமலத் தடங்கண் முகிலே. 2

பரமசிவம்

கருணை வடிவினர் சலமின் மகிழ்தரு
கடிகொ ளிதழிபெய் செஞ்சடைச் சேக்கையர்,
கனக மலையருள் உலகு தருமொரு
கயன்மை விழியிட முய்ந்தசற் பாக்கியர்,
கலக மொடுகடல் கடையு மிமையவர்
கழலின் முறையிட நஞ்சினைத் தேக்கினர்,
கரிய பகடுடை முதுகி னமனுடல்
கவிழ அடிகொடு வன்புறத் தாக்கினர்;
அருண மெரிதிரி முனைகொ ளயிறுடி
யயனுள் வறுதலை செங்கையிற் றூக்கினர்,
அரியொ டனைவர்த மகமு மகல்புர
மவையு நகையெழு செந்தழற் காக்கினர்,
அளவில் பிறவியு மெனது பிணிகளு
மவரை நினைவுறு முன்புறப் போக்கினர்,
அவர்த மமரர்கள் எவரும் வழிபடு
மரிய பதமல ரன்பினிற் சேர்க்குதும்;
வருண மணிநகை மதியை நகுமுக
மயிலி னியல்பயில் கொம்பினைக், கூக்குரல்
மயிட னிடவவ னுடலை யடுநெடு
வடிகொள் படைகொள்க ரும்பினைச் சாக்கியர்
மதமு மமணரு மடிய அழுமகன்
மகிழ அமிழ்தருள் மின்றனைக், கோக்களின்
மலைமன் மலயமன் மகிமை பெறவவர்
மகவின் வருமொர ணங்கினைக், கூப்பிடு

தருண மதிலடி யவர்க ளுளமகிழ்
தழைய அருள்பொழி கொண்டலைப், பூக்கமழ்
தருவு நிறைமிரு திருவு மருவிய
தகைய சுழியல்ம ருந்தினைத், தீக்கணை
சயில வரிசிலை யுடைய கடவுளர்
தழுவி மகிழ்தரு பொன்றனைத், தோற்றிய
சகல வுலகமு முதவி யினமிகு
தலைமை யிளமைகொள் பெண்டனைக் காக்கவே. 3

### போதி விநாயகர்
(ஸ்தல விநாயகர்)

தாதை தழுவப் புனல்முடிமேற்
றவழுந் தவள மதிக்கலத்தைச்
சர்ப்பக் கயிற்றோ டிழுத்தெறிந்து
தழைக்கும் புழைக்கை நீர்வாங்கிப்
போதெய் மதனுங் கீரனும்போற்
பொறேனென் றழற்றுந் தழற்கண்மேற்
பூரித் துடலம் பூரிக்கும்
போதிக் களிற்றைப் புகழ்கிறபாம்;
கோதை மலர்ந்த குழற்கொடியைக்
குன்ற மிரண்டேந் தருட் கொம்பைக்
குன்றாக் கதித்தாட் கற்பகத்தைக்
குலவு மிமவான் அளித்த மட
மாதை வேத சிரோமணியை
மாற னீன்ற மணி விளக்கை
வளங்கொள் சுழியற் பிரானின்ப
வாழ்வை மகிழ்விற் புரக்கவே. 4

### முருகக்கடவுள்
மதியொடு முக்கட் பிரான்முடிக் கேற்றிய
மலிபுனன் மெய்க்கற் பினாள்வயிற் றோற்றிநல்
வளமலி விட்கற்ப காடவிப் பாற்பொலி
மகபதி துக்கப் படாவகைக் காப்பொரு
ததிர்வினை வெற்பைச் சுறாவலைத் தூற்றெழும்
அலைகட லைக்கட் பராரையிற் கோட்டலை
அசுரம ரத்தைத் தடாதடர்த் தாற்றல்கொள்
அயிலுடை வெற்றிக் குமாரனைப் போற்றுதும்;

நிதியென் நத்திக்கி லீனுமுத் தாற்பணை
நிலவு விரிப்பக் கலாநிதிக் கேக்குற
நிகழ்சுழி யற்குட் பணாவிடப் பாற்றுயில்
நெடுமுகி லுக்குச் சகோதரிக் கோற்றொடி
பொதிமணி மொய்த்துக் குலாவவிட் டீர்க்கிடை
புகாது நெருக்கிக் கராசலக் கோட்டினைப்
பொருதுமு றித்துப் புராரிபொற் றோட்கிரி
புணர்முலை வெற்புக் குமாரியைக் காக்கவே 5

### பைரவர்

பண்கொண்ட தெய்வப் பசுந்தேன் மொழிப்பொற்
பயோதரப் பாவை பாகர்
பகீரதி முடிக்கருணை யையர்க் குவப்பமுற்
பழிமொழி பகர்ந்த கஞ்சக்
கண்கொண்ட லுந்தியங் கமலா சனக்குரிசில்
கந்துமித் தேந்தி யதனிற்
ககனத் துளார்வீ றெலாங் கொண்ட பயிரவரக்
கடவுளர் புரந்தருள்க; வான்
எண்கொண்ட அண்டகோ டிகளெலாம் தன்வயிற்
றீன்றெடுத் தவைக ளுய்தற்
கிளங் கன்றி னுக்கிரங் கும்புனிற் றானென
இரங்கிநற் சுழியல் மேவி
விண்கொண்டல் போலமெய்த் தண்ணளி சுரந்து மேன்
மேற்கருணை வாரி பொழியும்
வெண்மையுஞ் செம்மையுங் கருமையுஞ் செறியமை
வேல்விழிப் பைந்திருவையே.

### பிரமதேவர்

வெண்டிரை சுருட்டிக் கலித்தெழும் பாற்கடலின்
மீப் பணம் விரித் தமைத்த
மெத்தை மேற் கட்காற் கரச்செழுங் கமலங்கண்
மிளிரக் கிடந்த கப்பாற்
றண்டுழாய்ச் சேக்கையிற் செந்திருப் பெற்றவொரு
சங்கொளிர் கருங் கடலினுட்
டமனியத் தாமரை யிருந்துல களிக்குமொரு
சதுமுகக் கொண்டல் காக்க;

வண்டுணச் செந்தேன் ஒழுக்குந் திருக்கொன்றை
மாலைச் சடாம குடமும்
வானாறும் வெண்மதிப் பிள்ளையும் பொள்ளெனமுன்
வழுவித் தவழ்ந்து நால
அண்டருங் காணவன் றம்பொன்மலை மன்றல்வாய்
ஆசைக் கடற்குண் மூழ்கி
ஐயன் குனிந்தெடுத் தம்மிமேல் வைத்தமெல்
லடிச்சுழியல் மின்கொ டியையே. 7

### தேவேந்திரன்

தவங்கள் தழைக்கும் இமயமலை
தன்னிற் றோன்றித் தமனியப்பொற்
றாமப் புளக முலைதாங்கித்
தங்கிச் சுழியற் றலைமலைபோற்
பவங்கள் தவிர்த்தோர் மலைகுனித்துப்
பனைக்கை மலையன் றுரித்தமுக்கட்
பவள மலையைத் தழுவுமைக்கட்
பச்சை மலையைப் புரந்தருள்க;
நிவந்த கரடப் பேரருவி
நிகழ்நாற் கோட்டு மலையுகைத்து
நீரு நிலனு மறமலையு
நெடியு மலைப்பல் சிறகரிந்து
சிவந்த குலிச மலை மலர்க்கைத்
தெய்வச் சசிபூண் முலைச்சுவடு
திளைக்கும் புயவன் மலைக்ககனத்
தெய்வத் தலைமைக் கருமலையே. 8

### இலக்குமி

தொளைகொண்ட வேய்ங்குழற் பாடலுக் கின்பந்
துளும்பா னினங்க ளோம்பும்
துறுமுடைக் கொச்சைமெய்ப் பொதுவராய்ப் பாடியிற்
றோகைய ரொளித்து வைத்த
அளைகொண்ட கள்வன் தனைக்கொண்ட பின்- கொண்டல்
அணையுந்தன் வீட்டழைத்தங்
கரியணை யளித்தகல மணிமஞ்ச மேலணையு
மம்புயோ திமம் புரக்க;

வளைகொண்ட புனலாடை நிலமங்கை கொங்கை மலை
வந்திழிந் தொழுகு தீம்பால்
மன்னுயிர்க் குழவிக் குழாங்களுக் கூட்டுவதில்
வருபாவ கரிநதிப் பாற்
கிளைகொண்ட வண்டொலித் தண்பொழிற் சுழியல் வாய்க்
கொண்டையங் கட்டுவரிதழ்க்
கிளர்மணித் துணைமுலைத் தளிரடிப் பனிமலைக்
கிஞ்சுகக் குஞ்சு தனையே. 9

### சரசுவதி

கார்கொண்ட மேனிச் செழுந்தா மரைக்கட்
கருந்துழாய்க் கடவு ணாபிக்
கமலப் பொகுட்டணை யிருந்தளவி லுலகெலாங்
கற்பிக்கும் எந்தை புணருந்
தார்கொண்ட பூங்குழற் கயல்விழித் துணைமுலைச்
சதுமலர்ச் செங்கை கொடியிற்
றளிரிடைப் பிடிநடைப் பவளவாய்த் தவளச்
சரோருகத் தன்னை காக்க;
நீர்கொண்ட மேகக் குழாமுமைக் கூந்தற்குள்
நின்றெழு நறுந்தூபமு
நிறையநவ மணிமாட நீலமணி மாடமாய்
நிகழ்திருச் சுழியல் நகர்வாய்ப்
பார்கொண்ட வுதரத் தறங்கொண்ட கரநம்
பரன்கொண்ட ஒப்பில் கற்பு
பல்லுயி ரளித்தருளும் அளிகொண்ட சேற்கண் மெய்ப்
பச்சைப் பசுந்தேனையே. 10

### தாருக விநாசனி

(காளி)

கொண்டலி னகட்டைக் கிழித்துக் கொதித்துக்
குதிக்குமிடி யேறு மஞ்சக்
கொக்கரித் தெழுமுக்ர வக்ரதந் தக்கொடுங்
கோளரிவல் லேறுகைத்துத்
தண்டம தெடுத்துப் பகைத்துச் சினத்துவரு
தாருகக் குன்றுடைத்துத்
தரணிக்கும் உம்பர்க்கும் இன்புய்த்த பாலையந்
தலமடப் பிடிபுரக்க;

மண்டுதண் கருணைத் தெணீருளக் கரகத்தின்
வார்த்தன் படுப்பி னேற்றி
மானத்தி யானவரி பெய்துகற் பழலிட்டு
வாள்விழிக் கடையினூதி
அண்டமெனும் வெண்மணற் சோறமைத் தீற்றிற்ற
னன்பனுக் கூட்டி யிவ்வா
றானந்த வாற்றின்விளை யாடுமொரு சுழியல்வெற்
பருமைப் பிடிக் கன்றையே. 11

### துர்க்கை, சத்த மாதர்கள், முப்பத்து முக்கோடி தேவர்கள்

சீதள மதிப்பிள்ளை தவழ்வெள்ள மேற்கொண்ட
செங்கருணை வெள்ளத்தின்மேற்
செம்பாதி முற்றும் பசப்பப் படர்ந்தளவில்
செகமெலாம் பூத்த லர்ந்தோர்
மாதல மெனச்சுருதி புகழ்சுழியல் நகர்வைகி
மாலுக்கு மன்னுயிர்க்கு
மகிணற்கு மின்னுயிர்த் துணையான துணைமாலை
வல்லியைக் காத்த ருள்க; வெங்
காதழற் கரியுரிப் போர்வையினள், கல்லினிற்
கடறூர்த் தவள், கடலினிற்
கனல்மண்ட வேல்தொட்டவள், கற்பகப்பொலங்
கடிமலர் குழற்சேர்த்தவள்,
மூதடற் சிங்கே றுகைத்தவள், வழிதுமறை
முன்கோத் தவ, ளெ யிறினால்
முதுபா ரெடுத்தவளொ டெழுவர்களு முப்பத்து
முக்கோடி தேவர்களுமே. 12

### 2. செங்கீரைப் பருவம்

கார்தங்கு வல்லிக் கொடிக்குநீ ராட்டலிற்
கங்கைநீ ராட்டிமுக்கட்
கடவுளை நிகர்ப்பத் தரித்தபிறை யெனநுதற்
காப்பிட்டொர் பொட்டுமிட்டுப்
பார்தங்கு முதரப் பரந்தாங் கிடைக்கு மொளிர்
பட்டாடை கட்டி மிளிர்பொற்
பாதாதி கேசமுதல் மைக்கடல் மறைத்தொளிசெய்
பருதியினி லணிதிருத்தி

வார்தங்கு முகிழ்முலைப் பொன்மாலை மடிவைத்து
மார்பணைத் துச்சிமோந்து
வாய்முத்த மிட்டுத் தழீஇ யின்ப வெள்ளத்தின்
மல்கமணி வாய்மலர்ந்தோர்
சீர்தங்கு நகையாடு பச்சைப் பசுந்தோகை
செங்கீரை யாடியருளே
செழியர்க்குள் வரும்வல்லி சுழியற்கு ளொருசெல்வி
செங்கீரை யாடியருளே. 13

பொற்றா மரைச்சிற் றடிச்சிலம் போலிடப்
பொம்மெனு முலைக்கொல்குமென்
பூங்கொடி புனைந்தமணி மேகலைக் கிண்கிணி
புலம்பச் சிவந்த செந்தேன்
நற்றா துகுஞ்செய்ய காந்தளங் கைத்தவள
நகைவளை கலிப்பமெய்ப்பால்
நாயகன் கோதைமேற் சூட்டுதண் கோதைமேல்
நச்சுவண் டினமிசைப்ப
முற்றாத பயனின்று பெற்றன மெனச்சுருதி
முறையிடச் சுரர்துதிப்ப
முண்டகன் கைத்தாள மால்கொட்டு மத்தள
முழங்கச் சபைக்குள் மதனைச்
செற்றா தரித்தவனொ டாடும் பசுங்கிள்ளை
செங்கீரை யாடியருளே
செழியர்க்குள் வரும்வல்லி சுழியற்கு ளொருசெல்வி
செங்கீரை யாடியருளே. 14

உறுஞான வெள்ளத்தி னாநந்த வண்டலுக்
குள்ளெண் குணப்பெண்களோ
டுலகங்க ளாயபசு மட்கலம் பற்பலசெய்
தொன்றின்மே லொன்றடுக்கி
நறுமா மலர்ப்பீட நான்மறையி னொருவனா
னால்வகைப் பேதமாயேழ்
நவையற்ற தோற்றத் தளப்பரு சராசர
நகைப்போ னகஞ்சமைத்தோர்

மறுவே தவிர்த்துப் புரக்கக் கடைக்கணருள்
மாலுக் களித்து முடிவில்
மகிணனுக் கொருவிருந் தூட்டிக் களிப்புற்றிவ்
வாறுவிளை யாட்டாக வான்
சிறுவீடு கட்டிவிளை யாடுமொரு பெண்பிள்ளை
செங்கீரை யாடியருளே
செழியர்க்குள் வரும்வல்லி சுழியற்கு ளொருசெல்வி
செங்கீரை யாடி யருளே. 15

மீனிற் பொலிந்ததுவ சத்தரசு மம்பொன்மலை
வெற்பரசு முட்களித்து
மெய்ம்மயிர் முகிழ்ப்பத் தழீஇ யெடுத் தணியகல
மீதணைத் தேந்திமைச்சூல்
வானிற் சிறந்தசிறு மழையளக வுச்சியின்
மணந்தார்வ மலரும் வதன
மலர்வாய் கபோலமுத் தாடியுல கீன்றருளும்
மணியால் வயிற்றின் முட்டி
ஊனிற் பரந்தெழும் பேரின்ப சாகரம்
உனக்கும் பரிந்தளித்தன்
புரையாடி யென்னன்னை யேயென்னு முன்னவர்க
ளோடுநகை யோடு குழறித்
தேனிற் பசுங்குதலை மொழியாடு பைங்குயில்
செங்கீரை யாடி யருளே
செழியர்க்குள் வரும்வல்லி சுழியற்கு ளொருசெல்வி
செங்கீரை யாடியருளே. 16

கொங்குவிரி கொந்தளக் கோதைமேல் வண்டினம்
கொண்டலொத் தாட முத்தின்
கொண்டையொடு தொங்கலும் பிரபையும் சுட்டியும்
கோளுலக மொத்தாடமற்
றெங்குமொளி ரரதன மிழைத்தகொந் தளவோலை
யீரிரவி யொத்தாட மூக்
கின்முறுவ லொளி பெறப் பன்னாளு மலைவதொத்
தெண்டரள மொன்றாடவிட்

கங்கைபுரை யாரக் கதிர்க் கொப்பு ளோடுகண்
கயல்களுக் கொத்தாடநங்
கணவனே மேலாய கடவுளல் லாதொருவர்
கண்டிலே னென்ப தொத்தோர்
திங்கள்முக மாடவொளிர் பச்சோதி மப்பேடு
செங்கீரை யாடி யருளே
செழியர்க்குள் வரும்வல்லி சுழியற்கு ளொருசெல்வி
செங்கீரை யாடியருளே. 17

வேறு

பரிபுர வொலியொடு பதமல ராடப்
பைங்கொடி யிடையாடப்
பகிர்தரு மண்டச ராச மோடொரு
பச்சா லிலையாடப்
கரமல ரறமொடு வளையொடு மாடக்
களபக் குன்றாடக்
கலைமதி முகமெழி னிலவொடு மாடக்
கருணைக் கண்ணாட
வரமொடு நகையொடு வாய்மல ராட
வளைக்கா தணியாட
மழையள கம்மணி மின்னொடு மாட
மதிப்போ டதுகண்டே
அரனுமுண் மிகுகுது குலமொடு மாட
ஆடுக செங்கீரை
அழிவில் வளந்தரு சுழிய லிளங்கிளி
ஆடுக செங்கீரை. 18

கொண்டன் மலர்ந்தமின் னேரணி யோதி
குழைந்து குழைந்தாடக்
கொடுமதன் வின்னிகர் இருபுரு வங்கள்
குனிந்து குனிந்தாடக்
கண்ட மலர்ந்தபொன் மணியொளி மாலை
கலந்து கலந்தாடக்
கரமலர் தங்கிய வண்டி னினங்கள்
கலின்கலி னென்றாட

தொண்டை மலர்ந்தசெவ் வாய்விர லொன்று
சுவைந்து சுவைந்தாடச்
சுருதியு மூவரும் யாவரும் அன்பு
தொடர்ந்து தொடர்ந்தாட
அண்ட மலர்ந்த பசுங்கொடி யாமென
ஆடுக செங்கீரை
அழிவில் வளந்தரு சுழிய லிளங்கிளி
ஆடுக செங்கீரை. 19

பொன்புனை தாண்மலர் நம்பின ருய்தல்
புரந்தனம் என்றாடப்
பொழியருள் விழிமல ரெழுபுவ னங்கள்
புரந்தனம் என்றாட
மின்பொலி சுட்டி மலர்க்குழல் கொண்டலை
வென்றனம் என்றாட
மென்கர நாண்மலர் தன்மைவெ ளாண்மை
விளைத்தனம் என்றாட
வன்புறு கொங்கை அரன்புயம் ஒல்க
மலைந்தனம் என்றாட
வாய்மலர் தொண்டர்கள் விண்ட வரங்கள்
வழங்கினம் என்றாட
அன்பரும் இன்ப நெடுங்கடல் ஆடிட
ஆடுக செங்கீரை
அழிவில் வளந்தரு சுழியல் இளங்கிளி
ஆடுக செங்கீரை. 20

உலகமு மளவறு முயிர்களு முதரமு
ளுண்டா மென்பேதா
யுலவிய நிலவொளி நிலவிய முடியி
னுயர்ந்தோர் கண்போல்வாய்
மலவினை யடியவ ரிருவினை களையு
மருந்தாம் வண்பூவாய்
மலையம னிறைதவ மதின்மக வெனவரு
வண்டார் பைங்கோதாய்

குலமதி லெமைமுதல் வழிவழி யடிமைகள்
கொண்டாள் பொன்தாளாய்
குலவிய மரகத வொளியின் மலர்ந்தருள்
குன்றா மின்பாவாய்
திலகம தொளிர்நுதன் மலையவ னொருமகள்
செங்கோ செங்கீரை
சிவமகிழ் சுழியலி னுவமையி லொருமயில்
செங்கோ செங்கீரை. 21

மருமலி குழன்மதி முகவருள் பொழிவிழி
மஞ்சே தஞ்சார்பார்
மனமல ரளிநறை நுகர்தரு மறைபுகழ்
வண்டே கண்டோர்கள்
இருவினை திரிமல மெழுபவ மறவெழு
மின்பே பொன்போனின்
றிமிழ்சடை முடியரொ டிகலொடு நடமிடு
மென்றாய் குன்றாத
குருமணி மலர்மலர் மரகத ஒளிதழை
கொம்பே யன்போடுங்
குலவிய வுலகற மளவறு முயிர்விளை
குன்றே நன்றே செய்
திருமகள் மருமகள் துரைமகள் வரைமகள்
செங்கோ செங்கீரை
சிவமகிழ் சுழியலி லுவமையி லொருமயில்
செங்கோ செங்கீரை. 22

### 3. தாலப் பருவம்

முத்துஞ் சாந்துந் துதைமலரு
மூழ்கு மாதர் தனப்பொருப்பின்
மோதித் திரும்பும் திரை நெருக்கு
முழக்கத் துகளும் பெருவாளை
தத்தும் புனலிற் றுள்ளிமுகி
றன்னைக் கிழித்தோர் விண்மீனிற்
றயங்கி மகவான் வாளை நகைத்
தாடித் தருமாக் கனிக்குலையின்

மொத்தென் றிழிந்தூற் றமுதகுட
முரித்தக் கனிநீ ரமுதூடு
முழுகி யதனோ டொழுகிவந்து
முரலும் பாவ கரிநதிச்சார்
பத்தந் தழைக்கு முத்திபுரத்
தரசே தாலோ தாலேலோ
அகிலாண் டமுமீன் றறம் வளர்த்த
அன்னே தாலோ தாலேலோ. 23

செவ்வாய் மாதர் அணிகலவைச்
சேற்றி னிழிந்த பனிநீரும்
சிந்துங் கோதை மலர்த்தேனும்
தேம்பூஞ் சோலைக் கனிநறவு
மொவ்வாத் திரண்டு திரைமோதி
யோடிச் சாறாக் கண்டுவரி
யோரே ழிடைபுக் கேழியல்பு
மொழித்திவ் வியல்பு தரப்புவிமேற்
றுவ்வா முகிலக் கடலருந்தித்
தூந்தேமாரி பொழியவளஞ்
சுரந்தீ ரின்பஞ் சுரந்திடவிச்
சுகமங் கிலையென் றின்னகர்வேட்
டவ்வா னவரும் வருஞ் சுழியற்
கழகே தாலோ தாலேலோ
அகிலாண் டமுமீன் றறம்வளர்த்த
அன்னே தாலோ தாலேலோ 24

நெல்லுங் கரும்புந் தருந்தரள
நிரையும் பூக நித்திலமு
நினைவிற் பிரிவு நினைந்தறியா
நெஞ்ச மடவார் புலந்தெறிந்த
புல்லுங் களப முலைமுத்தும்
பூன்ற மதிபோ னிலவெறிப்பப்
பொருவி னாக ரொளிமணியாற்
புனைமா டமுமன் னவர்முடியும்

வில்லுங் கணையும் நுதல்விழியாய்
மிளிர் மா தர்கள் கொந் தளக்குழையும்
வெயில்விட் டெறிப்ப இராப்பகல்போல்
விளங்கக் குமுதம் பங்கயமோ
டல்லும் பகலும் மலர்சுழியல்
அணங்கே தாலோ தாலேலோ
அகிலா ண்டமுமீன் றறம் வளர்த்த
அன்னே தாலோ தாலேலோ. 25

சினைப்பூந் தளிர்ப்பைந் துணர்மாவின்
செல்வக் கனிநீ ரால்வருக்கைத்
திரட்கா வளர அதன்கனியின்
சேற்றாற் கதலி வளரவதன்
கனிப்பா லிழியுங் கடிநறவாற்
கரும்பு வளர அக்கரும்பைக்
கறித்து மேதி தருஞ்சாற்றாற்
கழனிச் செந்நெல் வளரவது
மனைப்பா லளிக்கு மின்னமுதால்
வரம்பி லுயிர்கள் வளரவுயிர்
வழங்கு நெறியாற் பலதருமம்
வளர வளருந் தருமமெனு
மனைப்பாற் பயன்கள் வளர் சுழியல்
அமுதே தாலோ தாலேலோ
அகிலா ண்டமுமீன் றறம் வளர்த்த
அன்னே தாலோ தாலேலோ. 26

நீடுங் ககன முகடளவி
நிற்குஞ் சிகரப் பொற்பொருப்பும்
நிமல னுறையு மிரசதத்தி
னிழல்வெண் பொருப்பு மெனக்கருதி
யோடுங் கதிர்க ளவைகளைச் சூழ்ந்
தோடித் திரிய கருமுகில்க
ளுண்புக் கோதிக் கிடும்புகையோ
டுலவா நிவந்தாங் குயர்தளத்திற்

கூடுங் கணவ ரொடுமடவார்
குளிர்விண் ணதியிற் குளித்துமணிக்
குடுமி யேறிக் கற்பகப்பூக்
கொய்ய வளைக்குந் தோட்டிகள்போ
லாடுங் கொடிமா ளிகைச்சுழிய
லணமே தாலோ தாலேலோ
அகிலாண் டமுமீன் றறம்வளர்த்த
அன்னே தாலோ தாலேலோ. 27

வேறு

ஓதற் கருமுயர் மாடக் குடுமியி
னுறுமைப் படைவிழியார்
ஓதிக் கிடுமிகும் வாசப் புகைதிகை
ஒருமித் தெழுவதுவான்
சீதக் குலமுகின் மானத் தனமிசை
செறியச் சொரிபனிநீர்
சிதறுற் றிழிவதம் முகிலிற் பொழிபுனல்
சிவணக் கமழ்தருபூங்
கோதைக் கணிமலர் பாயற் கிடுமலர்
கூடக் கழிவதுவிட்
கோன்மெய்ப் புலவர்நின் மேல்மொய்த் தலர்மழை
கூரப் பெயுமதுபோல்
தாதிற் பொலிதரு சூலப் புரமணி
தாலோ தாலேலோ
சங்கரர் பங்கினி லங்கிய பைங்கிளி
தாலோ தாலேலோ. 28

பத்தித் தலமிசை பற்றிப் படர்தரு
பச்சைக் கொடி யனையாய்!
பரிவிற் றொழுபவர் வினையைத் தடிதரு
படையிற் றிகழ் விழியாய்!
முத்திக் களவறு சித்திக் கிடமெனு
மொய்ப்பொற் கழலிணையாய்!
முனிவிற் பொருமொரு மயிடப் பதகனை
முடியப் பொருதிறலாய்!

வித்திற் பலவுல கத்தைப் பலதிறம்
விளைவித் திடுவயிறாய்!
விரைவிற் றிரைகொடு வரையைக் கரைகளில்
விசிறிப் பவகரி நீர்
தத்திச் செறிதுறை முத்திப் புரமயில்
தாலோ தாலேலோ.
சங்கரர் பங்கினி லங்கிய பைங்கிளி
தாலோ தாலேலோ. 29

பாலிற் கமுகெழும் வாழைக் குலம்வளர்
பலவிற் பணையிவைபூம்
பந்தர்த் தவளையின் முழவத் தொனிவளை
பணிலத் தொலிஞிமிறார்ப்
போலச் சதுமறை யாகப் புயறவ
ழொருகொக் கிடைகவிக
ளுணுநற் கனிநறை யிலையுற் றதுமறை
யுறநெய்க் கடிவளர்தீப்
போலப் பொலிதரு மலர்மொய்த் தடமனை
பொரவெண் பதுமவணைப்
புக்குற் றரசவ னம்பெடை தழுவுதல்
புதுமன் றலின் மலியுந்
தாலத் தினிலுயர் சூலப் புரநிதி
தாலோ தாலேலோ
சங்கரர் பங்கினி லங்கிய பைங்கிளி
தாலோ தாலேலோ. 30

அருள் விழி யிற்பல புவன மளித்தரு
ளன்னே! யெந்நாளும்
அடியவ ருக்கினி தகநெகிழ் வுற்றிடு
மன்பே! யென்போல்வார்க்
கிருமை நலத்தையு மெளிதி னளித்தரு
ளென்றாய்! குன்றாகும்
இமிழ்திரை முத்தணி மிளிர்கன கத்தன
வின்பே! மின்போலும்

பரும விடைக்கலை மதிநுதல் பெற்றெழு
பண்பே! கண்போலும்
பரம னுரத்திடை சுவடு பதித்தருள்
பணில வளைத் தளிரால்
தருமம் வளர்த்தருள் சுழியன் மலர்க்கொடி
தாலோ தாலேலோ
சங்கரர் பங்கினி லங்கிய பைங்கிளி
தாலோ தாலேலோ. 31

உந்து மறப்படை கொண்டிகல் கயமுக
னுயிரை யொறுத்தகையொன்
றொருகதை யைப்பெரு வரையின் மருப்பினி
துரைய வரைந்தகையொன்
றெந்தை யளித்தருள் கனியை விருப்பொடு
மினிது பிடித்தகையொன்
றேழ்கட லுண்டகை காவிரி தந்தகை
யென்னு மிரண்டுகையோ
டைந்து கரத்தெழு தொந்தி வயிற்றிழி
யாறு மதத்தொருகோட்
டருள்பொழி முக்க ணிரண்டடி நால்வா
யம்பவ ளக்கிரிபோற்
றந்தி தனைத்தரு சுழியன் மடப்பிடி
தாலோ தாலேலோ
சங்கரர் பங்கினி லங்கிய பைங்கொடி
தாலோ தாலேலோ. 32

### 4. சப்பாணிப் பருவம்

இட்டமிடு பத்தரிடை மைக்கணருள் கொட்ட, மல
ரின் குமுத முறுவல் கொட்ட,
எண்டொடை செறிந்தளி நிறைந்தகுழனறை கொட்ட
இருகுழையு மழகு கொட்ட,
வட்டமுக மிக்கமதி வெட்கநிழல் கொட்ட, வளர்
வனமலைகள் கலவை கொட்ட,
மாணிக்க மெய்ப்பணிக ளாதித்த னொளிகொட்ட
வார்சிலம் போதைகொட்ட,

நட்டமிடு முத்தரிதழ் துய்க்கவா யதுகொட்ட,
நாடுவோ ரன்பு கொட்ட
நானில வுயிர்க்கெலா மின்பவாழ் வதுகொட்ட,
நாகர்துந் துமிகள் கொட்டித்
தட்டறுபன் மலர்கொட்ட முத்திநக ரத்துமயில்
சப்பாணி கொட்டியருளே
சராசர மளித்தருள் பராபரை யெனுங்கிள்ளை
சப்பாணி கொட்டியருளே. 33

பண்ணளி முரன்று கறை பில்குபொற் றாதுகும்
பங்கயத் தோன்படைத்தேன்
பச்சைமால் சங்கரன் காத்தழித் தோமெனப்
பற்றுற்ற வீறுகண்டெடன்
கண்ணரு ளிலாதிவர்க் கேதென வியப்பொடுங்
கைபுடைத் திடுவ தேற்பக்,
கைபொத்தி யன்பினிரு மைந்தரை யழைப்பது
கடுப்ப, வீ ரேழ்தட்டின்மே
லெண்ணரிய பல்லுயிர் முளைபரப் பித்தழைத்
திடமுளைக் கொட்ட லொப்ப
எந்தைநட மாடுதற் கிசைய அயன் வெள்கவொத்
திட்டகைத் தாள மேய்ப்பத்
தண்ணளி மலர்ந்தவொரு சுழியற் பொலங்கொம்பு
சப்பாணி கொட்டியருளே
சராசர மளித்தருள் பராபரை யெனுங்கிள்ளை
சப்பாணி கொட்டியருளே. 34

கடகடென் றற்றுருள வோர்சிந்து பதிசென்னி
கண்டக ருடன்றுமுட்டிக்
கைகலந் துட்பொரும் போர்க்குள்நின் முன்வந்த
கார்ச்சங் கொலிக்கு மிஞ்ச
மடமடென் றார்த்துனைப் போற்கறுத் துலகுய்க்கு
மஞ்சிடி முழக்கு மெஞ்ச
வளமெலாம் நின்போல நீனிற வகட்டுதவும்
வாரிக் கலிப்பு மஞ்சப்

படபடென் றாசைக் கடற்குள் வீழ்ந் தெம்பிரான்
பார்ப்பதி யுனைப்புணருநாட்
பலசடைக் காட்டிற் பதைப்புற்றொளிக்கும்
பகீரதிப்பாவை கொஞ்சச்
சடசடென் றிட்டதா டனமொப்ப வப்பவொரு
சப்பாணி கொட்டியருளே
சராசர மளித்தருள் பராபரை யெனுங்கிள்ளை
சப்பாணி கொட்டியருளே. 35

கோதிய குழற்கொண்டல் மேற்கொண்ட வண்டினங்
கொல்லென் றிரைத்தெழுந்தேங்
கொழுந்தே னிறைந்தபைங் குமுதத் திருந்துவெண்
குளிர்நிலாப் பல்க வொளிகால்
ஆதவ னிரண்டிங்ங னேநிரைத் தெனவசைந்
தசைந்தா தனத்தொ டொளிர்நீ
டாசறு மணிக்கோவை யாலமைத் திட்டிடை
யணிந்தமே கலைபுலம்ப,
பாதமலர் தாங்குமறை நூபுர மொலிப்பவண்
பலவளைக் குலமலம்ப,
பரிவுறு முயிர்ப்புனத் திற்புலப் புட்கள்பா
றுற்றிடக் கைகொட்டல்போல்
தாதலர் மலர்க்கையாற் சுழியற் பசும்பேதை
சப்பாணி கொட்டியருளே
சராசர மளித்தருள் பராபரை யெனுங்கிள்ளை
சப்பாணி கொட்டியருளே. 36

குளிர்மதியி னான்முகத் தொருமகவை யுந்தியங்
கோகனக மேற்றருங்கார்க்
கொண்டலுட் கொண்டமயல் விண்டிடத் தண்டுழாய்க்
கோதையைப் பண்டுதவியும்
மிளிர்கிரண மென்சடைப் பவளவெற் பைத்தழீஇ
மேனிமேற் சுவடெடுத்தும்
விழிபொத்தி யிருளுய்த்தும் விட்டொளித்தும் விறன்
மேதிமுக வற்ற டிந்தும்

ஒளிருமிரு நாழிநெல் லாவண்டகோடியி
னுயிர்க்கெலா முணவளித்தும்
ஒப்பற்ற முப்பத்தி ரண்டறப் பிள்ளைகளை
ஒருமிக்க வேவளர்த்த
தளிரனைய செங்கையாற் சுழிகா புரித்தலைவி
சப்பாணி கொட்டியருளே
சராசர மளித்தருள் பராபரை யெனுங்கிள்ளை
சப்பாணி கொட்டியருளே. 37

வேறு

தண்டலை கொண்ட மலர்ப்பொழி லைக்கதிர்
சந்திர னைக்கவர்நட்
டங்கிய கங்குலை நின்னடி யன்பு
தராத மனத்தைவளை
நண்டலை யும்புன லிற்சை வலத்தைமுன்
னாலித ழிக்காயை
நளிர்திரை மைக்கட லைப்பல கூந்த
னறுங்கமு கைத்துறுகார்
வண்டலை நச்சிய வண்டி னொழுக்கையிம்
மாநில வைப்பறிய
வைத்திடு மஞ்சன வைப்பினை யெண்ணறு
மன்னுயி ரின்னுயிராங்
கொண்டலை வென்ற குழற்சுழியற்குயில்
கொட்டுக சப்பாணி
கூடிய பங்குட னாடிய பைங்கொடி
கொட்டுக சப்பாணி 38

ஆரரு ளன்பர் பவக்கொடி வேரை
யறக்கடி வாளினெறிந்
தவர்மன பங்கய முகபங் கயமதில்
அளியின் முரன்றுகொடுங்
காருறு வல்வினை வெம்பகை யைத்தெறு
கணையி னறுத்தழலாய்க்
காய்பிணி மாசற நீள்கரு ணைக்குளிர்
காழ்கட லிற்கழுவிச்

சீர்மரு வும்புவி தன்கரு நாடிடு
சேலினளித் தழியாத்
தீமல ஆணவ வெற்பினை வெற்பது
சிந்திட மைந்தன் விடும்
கூசயி லிற்பொரு கட்சுழி யற்கிளி
கொட்டுக சப்பாணி
கூடிய பங்குட னாடிய பைங்கொடி
கொட்டுக சப்பாணி. 39

சூதை மலைந்த முலைக்குல மாதர்கள்
தூமணி மேடையின்மேற்
றுவள்தரு கற்பக மென்மலர் கொய்பவர்
சூழுமம் மேடைமுகைப்
போதை யரம்பையர் கொய்திட வீது
பொறாமை யெனத் துணியாப்
பூவை யெறிந்து நகுஞ்சுழி யற்குயில்
பொன்னிம யத்தவனாந்
தாதை யெனும்பல மாதவ மெய்த்தளிர்
தந்திடு பைந்தருவிற்
றழுவி மலர்ந்தருள் மேனகை யென்ற
தனிச்சிறு கொம்பின் வரும்
கோதை மலர்ந்த குயக்கரு ணைக்கனி
கொட்டுக சப்பாணி
கூடிய பங்குட னாடிய பைங்கொடி
கொட்டுக சப்பாணி 40

வேறு

மணிதிகழ் கருணை விழிக்கம
லக்கை மலைக்கீடாய்
வளர்தரு களப முலைத்தண்
முகிற்கண் மலர்க்கோதைப்
பணிமொழி மதிநுதன் முத்தந
கைப்பவ ளத்தோடேர்
பழகிய இதழ்நில வொக்கு
முகச்செம் மணித்தோடாற்

றணிகுழை நுணுகிடை முத்தி
தழைத்த தளிர்ப்பாதத்
தனிமர கதமென மிக்கொளி
விட்ட திருக்கோலத்
தணிதிகழ் சுழிய லனப்பெடை
கொட்டுக சப்பாணி
அவனிகண் மலரு மலர்க்கொடி
கொட்டுக சப்பாணி. 41

தமிழ்மழை பொழியு மறைச்சிறு
வர்க் கரு டப்பாமற்
றடமுலை யமுது குழைத்தினி
துய்த்து வளர்த்தோடிக்
குமிழொடு குழைபொரு மைக்க
ணருட்கடை யிற்பார்வை
குலவிய அமுது விளைத்துல
கத்தை வளர்த்தார்வத்
திமிழ்திரை யுடைமண்ம கட்கணி
யிற்சுழி யற்போதத்
திறைநுதல் விழிமெய் குளிர்ப்ப
மகிழ்ச்சி திளைத்தாடற்
கமிழ்தருள் குதலை மொழிக்குயில்
கொட்டுக சப்பாணி
அவனிகண் மலரு மலர்க்கொடி
கொட்டுக சப்பாணி. 42

## ૪. முத்தப் பருவம்

காரிற் சிறந்த மழையளகக்
கயற்கட் கமல முகத்துவர்வாய்க்
கலவைக் குளிர்மென் முலைக்கருணைக்
கரும்பே! விரும்பிப் பெரும்பாலும்
பாரிற் பரவு மவர்க்கிகமும்
பரமும் பரமா னந்தமும்பொற்
பததா மரையிற் பழுத்தருளும்
பச்சைக் கொடியே! நச்சுடைநாண்

வீரக் கனகச் சிலைகொடிரு
மேனிக் கடவுட் கின்பவெள்ளம்
வேணி வெள்ளத் தையுமிழித்து
மேன்மேற் பெருகப் பெருகுமொளி
மூரற் கனிவாய் முத்தமருள்
முத்தே! முத்தந் தருகவே
முத்தி புரத்தின் முளைத்தமுத்தி
முதலே! முத்தந் தருகவே. 43

கருகுங் கொடிய விடமிடற்றுக்
கடவுட் கமலச் செழுங்கரத்தாற்
காதற் கடலைக் கடந்தேறக்
கனகக் குடத்திற் றழுவ வின்பம்
பெருக அளித்துப் பின்பளித்த
பிறைக்கோட் டிருதாட் பெருங்கருணைப்
பிள்ளைக் கரிக்கும் குறக்கொடிக்கைப்
பிடித்த கிரிக்கும் வடித்தமிழ்தம்
பருக அளித்தும் அனைத்துலகும்
பயந்துந் தளர்ந்து சாயாமற்
பணைத்துப் புடைத்துக் கதித்தடர்த்துப்
பரும நுசுப்பொல் கிடவீங்கு
முருகு விரியுங் களபமுகிழ்
முலையாய்! முத்தந்தருகவே
முத்தி புரத்தின் முளைத்த முத்தி
முதலே! முத்தந் தருகவே. 44

தென்னிற் பிறந்தமொழி, கலவைச்
சேற்றிற் பிறந்த கனதனஞ், செந்
தேனிற் பிறந்த கனியிதழ், பொற்
சிலையிற் பிறந்தநுதல், ஒளியா
மின்னிற் பிறந்த துவளிடை, வை
வேலிற் பிறந்த அருள்விழி, கார்
விசும்பிற் பிறந்த கருங்குழல், நல்
வேயிற் பிறந்த மென்றொடித்தோள்,

பொன்னிற் பிறந்த பதம், மயிலின்
பொற்பிற் பிறந்த இயல், அனைத்தும்
பொலிவிற் பிறங்கத் தென்னவர்கோன்
போற்றிப் பொலிந்த மகத்திலன்னான்
முன்னிற் பிறந்து வருங்கருணை
முருகே முத்தந் தருகவே
முத்தி புரத்தின் முளைத்தமுத்தி
முதலே! முத்தந்தருகவே. 45

மறுவின் மதியிற் பணையினொளிர்
வளையிற் சுடர்முத் தமுஞ்செழுந்தே
மலர்க்கற் பகந்தூ டெழுங்கமுகின்
மடன்முத் தமுமைங் கணைக்காமன்
குறுக வளைக்குஞ் சிலைக்கரும்பின்
குளிர்முத் தமும்நீ யறம்புரக்கக்
கொள்ளும் படிக்கு மிகவிளைநெற்
குழைமுத் தமும்புத் தமிழ்தமொழி
நறுமென் குழற்செந் திருப்பீட
நளிர்முத் தமுஞ்செங் கதிருதிப்ப
நனிமின் மினியின் குலம்போல
நலியப் பெருமா னுளம்பொலிய
முறுவன் முத்தங் தருங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முத்தி புரத்தின் முளைத்தமுத்தி
முதலே முத்தந் தருகவே. 46

நித்தந் தழைக்குஞ் சிவயோக
நிலையிற் றிரியா திருகலையை
நேடிக் கூட்டி ஒருவழியின்
நிறுவி நிறுவப் படுதறியிற்
சித்தந் தழைத்து நாதாந்தச்
செழும்பாற் கடன்மேன் முளைத்தசெழுந்
திங்கட் கலசத் தெள்ளமிழ்தம்
தேக்கித் தேக்கிப் பேரின்ப

மத்தந் திளைக்கும் பரஞான
மவுனத் தவர்தம் உளக்கோயில்
மதிமா டத்தின் மணிவிளக்காய்
வயங்கும் வேயீன் றருள்முக்கண்
முத்தந் திளைக்கும் இதழ்க்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முத்தி புரத்தின் முளைத்தமுத்தி
முதலே முத்தம் தருகவே. 47

மருக்கோ ளினப்பைந் தளிர்க்கற்ப கக்காடு
மல்குவிண் ணுலகு முதன்மேல்
வானுல கெலாமுலக மொன்றினுக் கொன்றாய்
மணிவாயில் புக்கிறைஞ்ச
தருக்கோ டெழுந்தமக மேருவு மெனக்கிவைக
டாமேரு வென்றிருப்ப
தட்டொடிய அண்டத்தை முட்டிப் புறக்கட
றனைத்தா நிவந்த தொப்பாய்
இருட்போ தறுக்குங் கதிர்ப்புரவி கீழ்வா
யிலிற்சென்று மீளவுவணத்
தீர்ந்துழாய்க் கொண்டன்முத லிமையவர் குழாம்பரவ
எழுபுவிக் கேழுநிலை சேர்
திருக்கோ புரங்கடிகழ் சுழிகா புரிக்கனி
திருப்பவள முத்த மருளே
தேவர்க்கு மன்னுமொரு மூவர்க்கு முன்னவள்
திருப்பவள முத்த மருளே. 48

கன்னன்முத் தந்தர வளைத்தெய்த மன்மதன்
கஞ்சமுத் தங்கருத முன்
கண்டுமுத் தம்முறுவல் கொண்டுமற் றங்குளக்
கட்கனற் றூண்ட முற்றுந்
தன்னமுத் தங்குதிர வேளிரதி முத்தமுலை
தன்னிற் புடைத்தயிற்கட்
டங்குமுத் தஞ்சொரிய வங்கசற் கருவுருத்
தருமையன் முத்த மிட்டிங்

கென்னின்முத் தங்கொள்ள வருகெனத் தன்மடி
யிருத்திமுத் தங்கொடுத்தங்
கின்னமுத் தந்தருக வென்னமுத் தாடிமிக்
கின்பவிளை யாடல் புரியுஞ்
செந்நெல்முத் தந்தரு திருச்சுழியின் மின்கொடி
திருப்பவள முத்த மருளே!
தேவர்க்கு மன்னுமொரு மூவர்க்கு முன்னவன்
திருப்பவள முத்த மருளே! 49

அம்பொற் கருங்காரி னம்புறக் கடலிதென
அகழிவா யுண்ண விண்ணத்
தலர்கதிர்த் தேர்ப்புரவி காறாவி யாவியெய்த்
தரைமதிற் கீழ் விலகமேல்
வெண்பொற் கலைத்திங்கள் சதுமுகோ திமமென்ன
மேன்மேல் விமானம்விட்டு
மேற் கொம்மை காண்டற் கிலாதகல வான்மீன்
மிளிர்முத் தணிப்பந்தர்சூழ்
பைம்பொற் றடந்திரை வளைந்தாங் கிலங்கிடப்
பலபொறிகள் கைக்கொள்படையாற்
பைந்துணர்க் கற்பகக் காடெறிந் தும்பரைப்
பணிசெயச் செயுமணிகொளச்
செம்பொற் றிறற்கோ மதிற்சுழியன் மென்பிடி
திருப்பவள முத்தமருளே
தேவர்க்கு மன்னுமொரு மூவர்க்கு முன்னவள்
திருப்பவள முத்தமருளே. 50

வேறு

மருவொரு தரளமுன் னகையொளி பெறவொளிர்
மைக்குமி ழுற்றலைய
வளர்பிறை நுதலணி பெறவுனை யணைபவன்
மத்தமு டிக்குளுறக்
கருவிழி எழில்பெற விழைகயல்செருகு
கடிப்பிணை யுற்றமரக்
கரவெழில் பெறவிழை கழையர னெனுமொரு
கப்பம ளித்திடவல்
லிருமுலை நிகர்பெற ஒருமலை மகளென
வேத்தி வளர்த்திடநின்

னியல்பெற மயல்பெற மயிலுநின்மகனையெ
டுத்துற விற்றரிய
முருகுய ரிளமயில் சுழியலி னொருகுயில்
முத்த மளித்தருளே
முழுமதி வழியினி லெழுகுழன் மொழிநிதி
முத்த மளித்தருளே. 51

கயல்பொரு மிருவிழி யிருமலை பொருமுலை
கடகம லாக்கர நன்
கதிர்மலர் குமிழ்மலர் மதிமலர் முகமலர்
கட்டிய சுட்டிமினும்
புயல்பொரு குழலிள மயில்பொரு மியல்படி
பொய்த்த நுசுப்பரனுட்
புளகம தெழவெழு குறுமணி முறுவல்செய்
புத்தமிழ் தக்கனிவாய்
மயலற வருள்பரி புரவடி யொடுமொளிர்
மைக்கொடி யிற்சுழியல்
வதிதரு மொருகுயி லளியணை மிசைநிதம்
வைத்து வழுத்துதொழின்
முயல்பவர் நினைபொரு ளருள்செயு மொருதிரு
முத்த மளித்தருளே
முழுமதி வழியினி லெழுகுழன் மொழிநிதி
முத்த மளித்தருளே. 52

### 6. வருகைப் பருவம்

பொங்கோத ஞாலமுட னண்டபகி ரண்டங்கள்
பூத்துக் கடைக்கணருளாற்
போற்றிப் புரப்பதுல கறியா தெனச்செய்ய
புந்தியிற் கொண்டு கொண்டல்
சங்கோ லிடும்பணைச் சுழியற் பிராட்டிநீ
தண்டமிழ்த் தென்மதுரைவாய்த்
தண்ணளி யொடுந்தவம் பண்ணுமொரு காஞ்சனத்
தையல்பா னெய்யுகுக்குங்
கொங்கோ டெழும்பிசித மாலையான் பாவையாய்க்
கோமுடி கவித்தமரர்தங்

கோன்முதற் றிக்கதிபர் நின்சமய நோக்கிநின்
கொற்றமுற் றத்துநிற்பச்
செங்கோற் கரங்கொண்டு திக்குவிச யங்கொண்ட
தென்னர்கோ மகள் வருகவே
திருமேனி நாயகற் கிருமேனி தந்தமெய்த்
தெய்வமாக் கொடி வருகவே. 53

ஆறிடப் பொழிமதக் கைம்மலைக் கருண்மலை
யணைச்சென்னி மீக்கிடந்த
அலைகடற் சிற்றாடை நிலமக ளகட்டகத்
தன்புயிர்க் குடிகளினிதீ
டேறிடத் தனிஞானம் வித்திற் பவக்களை
யெடுத்துத் தழைத்தெழப்பே
ரின்பப் பெருக்கைவிளை வித்துக் கொடுத்தவை
யிருக்கக் கதிக்கோயிலாய்
மாறடச் சூன்மழுக் கொண்டுதற் கொண்டதன்
மகிணனோ டூடிமுடிமேன்
மதியும்விண் ணதியுமோர் பருதியுங் குருதியு
மானக் குமைத்த பஞ்சிச்
சீறடித் தளிர்பெயர்த் தணிநகர்ச் சுழியலிற்
றிகழு மோதிமம் வருகவே
திருமேனி நாயகற் கிருமேனி தந்தமெய்த்
தெய்வமாக் கொடிவருகவே. 54

கார்கொண்ட தண்குழற் களிவண் டினங்குழற்
கண்ணியொ டசைந்துவர வான்
கருமுகிற் குள்ளெழுந் தொளியாத மின்னிறக்
கதிர்சுட்டி மின்னிவரநன்
னீர் கொண்ட முகமதிக் குண்மதி யெனக்குமுத
நிகழ்நகை யரும்பிவரவெண்
ணின்றுமொரு தண்டரள மூரலொளி யைக்கவர
நில்லா தலைந்துவரமென்
றார்கொண்ட பைஞ்சுடர்த் தோள்வளைக் கடைவரத்
தருமண்ட கோடியுதரா

றன்னிற் குலுங்கிவர மேகலை குலாய்வரச்
சகலலோ கமும்பின்வரச்
சீர்கொண்ட சுழியற் பெருங்கருணை மைவிழிச்
செல்வமா மயில்வருகவே
திருமேனி நாயகற் திருமேனி தந்தமெய்த்
தெய்வமாக் கொடிவருகவே. 55

பூமலர்த் தண்சினைக் கற்பகப் பைந்தருப்
பொழினிழற் பொன்னகருளார்
புண்ணியப் பலவளங் கண்டெமக் கன்னதே
பொன்னக ரெனுஞ் சுழியல் வாய்க்
காமர்மைக் கோதைவிற் றென்னுதற் புன்னகைக்
கண்ணடிப் பொற்கபோலம்
கட்கஞ்ச வங்கைக் கனங்குழைப் பூன்றக்
கலாமதிச் செல்வமுகமாக்
கோமலைப் பூண்முலைச் சாய்கழைத் தோள்வளைக்
குலமிடற் றாலுதரமாக்
கோண்மதக் கைக்கவா ணந்துகிர்ச் செவ்விதழ்க்
கூர்சினை விரற்கணைக்காற்
றேமொழிச் சேல்விழிச் சிற்றிடைச் சீறடித்
தென்னிமய மான்வருகவே
திருமேனி நாயகற் கிருமேனி தந்தமெய்த்
தெய்வமாக் கொடிவருகவே. 56

**இவ் முதலாக உள்ள செய்யுள்கள் கோவைக் கவியரசு வித்வான்**
**கு.நடேசக்கவுண்டர் பாடியவை**

கார்மேக படலமன கூந்தலும் பிறைநுதற்
கண்ணார்ந்த சிந்தூரமும்
கவினாசி யோடுசீ மந்தரே கையுமாய்க்
கலந்த அங்கு குசவிரும்பும்
ஏர்மேவு நிலவுசெறி தந்தங்களும் கும்ப
விணையுமதன் முகபடாமும்
எழின்மேவு துடைவாழை யானதும்பிக்கையும்
ஏந்துகாற் சங்கிலியுமாய்ப்

போர்மேவு கயமுகனை யொருகோட்டிலுயிர் கொண்ட
புகழ்மேவு கன்றையீன்று
பொற்சிலை பிடித்தபா கற்குவகைதந்தெங்கள்
புந்தித்தடத் துலாவும்
சீர்மேவு கவிகள் தரு மதிமதுர நுகர்பனிச்
சிகரிவளர் பிடிவருகவே
திருமேனி நாயகற் கிருமேனி தந்தமெய்த்
தெய்வமாக் கொடிவருகவே. 57

வேறு

இணையிலுயர் கயிலையினில் மலையின்மக
ளாய்க்காசி யினில் விசா லாட்சியாகி
எறிதிரைக் குமரியிற் கன்னிபக
வதியாகி எரிமூன்றும் வளர் தில்லையில்
துணைவனரு ணடவின்பு தோய்ந்துசிவ
காமியாய்த் தொல்காஞ்சி காமாட்சியாய்த்
தோணியிடை ஒருபெரிய நாயகியு
மாய்முதலை துய்த்த சேய் நாவலூரன்
பணியில் நமனுய்க்க வருபுக் கொளியி
லடியேங்கள் பணிகொள் கரு ணாம்பிகையுமாய்ப்
பட்டிமர கதமாகி எங்கெங்கு மிறைவனமர்
பரிசினுக் கேற்றபடியாய்
மணியிலொளி போலவமர் துணைமாலை
யம்மையே வந்தருள்க வந்தருள்கவே
வளமருவு சுழியலமர் மாணிக்க
மாலையே வந்தருள்க வந்தருள்கவே. 58

எங்கேனும் யாதாய்ப் பிறந்திடினும்
அடியார்கள் இடருற்ற போதிரங்கி
இங்கே எனச்சொல்லி முன்னிற்பன்
இறைவனெனும் எங்கள் தமிழ்விரகன் மொழியும்
வெங்காலன் வருபோதில் மார்க்கண்ட
னுக்காய் வெளிப்பட்ட விளையாடலும்
விழைவான சிறுவனுக் கமுத கடலீந்தபெரு
விதரணமும் அம்மை எம்மான்

பங்காகிநீ யிருந்தருள்கின்ற
பரிசெனப் பலகால் நினைந்துணர்ந்தோம்
பரமகல் யாணி சௌ பாக்யசன
னீயுனது பழுதிலெழில் வடிவுகாட்டி
மங்காத பேரருள் புரிந்தாள
இதுவேளை வந்தருள்க வந்தருள்கவே
வளமருவு சுழியலமர் மாணிக்க
மாலையே வந்தருள்க வந்தருள்கவே. 59

ஒருமூக னரிய வட மொழியிலைந் நூறுகவி
உனையோத அருள்புரிந்தாய்
உணர்வின்மிகு சங்கரா சாரியன் பலநூல்
உரைக்கமணி நாவமர்ந்தாய்
பெருமைமிகு காளிதா சன்மதுர கவிமாரி
பெய்யுமா றருள்சுரந்தாய்
பிரமா புரத்துவரு மொருசிறுவன் அமுதுண்டு
பெருநெறித் தமிழ் செய்வித்தாய்
உருகமனம் இன்னுமெத் தனை யடிய ருக்கெளிதில்
உற்றுனருள் வைத்துதவினாய்
உனதுவழி வழியடியர் மரபில் வருமெளியேமு
முய்யவொருகால் விழிமுனர்
வருக வருள் புரிகஇதென் அரிதோ மலைச்செல்வி
வந்தருள்க வந்தருள்கவே
வளமருவு சுழியலமர் மாணிக்க மாலையே
வந்தருள்க வந்தருள்கவே. 60

பெருகுநின துருவமெனு நிறைகருணை யுததியெறி
பிசிர்படுநல் விதியுடைமையால்
பிரமனரி சதமகனை முதலமரர் தமதடியர்
பெறவரிய வரமுதவுவார்
ஒருகுடையி னிழலிலலை கடலுடைப் புடவிவைத்
தொளியுலவ நிலவுமரசர்
உயிர்களுறு கலியுறுகண் ஒழியும்வகைகருணைவைத்
துவகையுற வுலகளிப்பார்

கருதிலுறு வெம்மை எரியின்குணம் போலம்மை
கருணையுன் குணமல்லவோ
கமலபத மிசையரிய மறை நூபுரங்க லின்
கலினெனொலி புரியவிரைவின்
மருகியென வுனையழைப் பவரையில்லாததுணை
மாலையம்பிகை வருகவே
வளமருவு சுழியலமர் திருமேனிநாதர்மனை
மணிவிளக்கே வருகவே. 61

வேறு

விழியாற் பிணையே யமுதொழுக
மிழற்று மொழியாற் பைங்கிளியே
விளங்குமுறுப்பாற் பலமலரும்
மேவிப் பொலிந்த விரைக் கொடியே
ஒழியா தீகை யுறுகையால்
உம்பர் செம்பொற் பூங்கொம்பே
உளதோ இலதோ எனுமிடையால்
உலையாத் திறல்சே ரரிப்பிணவே
அழியா மாதர் நடையினால்
அனமே பிடியே சாயலினால்
அணிமா மயிலே எங்களுயிர்க்
கரிய உயிரே பரகதிக்கு
வழியே சுழியற் றுணைமாலாய்
வருக வருக வருகவே
மருந்தே கண்ணுக்கொரு விருந்தே
வருக வருக வருகவே. 62

கமழும் பனி ராட்டவா
கடிமென் மலர்கள் சூட்டவா
கவின் சிந்தூரம் தீட்டவா
கண்ணுக் கொண்மை யூட்டவா
விமல மணிப்பூண் பூட்டவா
விம்பம் ஆடி காட்டவா
விருந்தின் னமுதம் ஊட்டவா
வீணை யிசைகள் மீட்டவா

உமையே ஊசல் ஆட்டவா
உன் பே ரழகு காட்டவா
உறுகண்ணே றிங் கோட்டவா
உதவ வாவுள் வேட்டவா
மமதைப் பேயை ஓட்டவா
மல்குன் அருளை நாட்டவா
வளரும் சுழியல் துணைமாலாய்
வருக வருக வருகவே. 63

### 7. அம்புலிப் பருவம்

#### சாமம்

பொருண்மேவு மறைகூறு திருநீறு முழுமேனி
பூசி மணி மாலை பூண்டு
புகழ்மேவு நற்றொண்டர் கணமேவ வானெறி
பொருந்திவரு நாவரசுபோல்
உருமேவி யொளிநிலவு வீசியுள மானுற
வுடுக்கணம் சுற்று முற்ற
உயர் வானி னீவரக் கண்டன்பு கொண்டுனை
யுகந்தம்மை யீங்கழைத்தாள்
திருமேனி நாதர்மிகு புகழ்மேவ வெண்ணான்கு
திகழறம் வளர்த்து வாழ்க்கைத்
திறமேவு செயலெலாந் துணைமேவி யொண்பெயர்
சிறக்கப் படைத்துலகினீள்
அருண்மேவு திரிசூல புரிமேவு மம்பிகையொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் மாலை யொளிர் மாணிக்கமாலையுடன்
அம்புலீ யாட வாவே. 64

மன்னுசிவ பாதவிரு தயவிருடி கேசனெனு
மாதவன் மனத்துதித்தாய்
வளர்கின்ற பருவத்தி லமுத முண் டாயினை
வளத்தமிழ் தளித்து வாழ்வாய்
முன்னிய வரத்துறையொண் முத்து மானம் பெற்று
முதுபதிக ளுலவி வருவாய்
முகவொளியி னாலிலகு குவலய மலர்த்துவாய்
முந்துமிச் செயல்கள் கண்டே

என்னுள மிருந்தருள் செய் ஞானசம் பந்த குரு
வினை யொத்த லெண்ணியுன்னை
இங்கு வா வென்றழைத் தாள் சகல வுயிருக்கும்
இக பரத் தினிய து ணையாம்
அன்னையுயர் திரிசூல புரிமேவு மம்பிகையொ
டம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் மாலை யொளிர் மாணிக்க மாலையுடன்
அம்புலீ யாட வாவே. 65

தானவ தரித்தவிம யாசலத் துறுபனிமெய்
தாங்கி வாழ்கின்றதாலும்
சதபரிப் பெருவேள்வி செய்துதனை யீன்வழுதி
தன்குலத் தலைமையாலும்
ஊனமறு செல்வத் திருத்தோழி யொடுகடல்
உதித்ததோ ருறவினாலும்
உயர்தமையன் மகனாத லொடுசோம னெனுநாமம்
உற்ற நற் பெற்றியாலும்
வானவர் வழுத்து சேனாபதிக் குமரற்கு
வாரணப் பிடியை யுதவும்
மாதர்சசி யின்பெயர் தரித்துள்ள தாலுமுள்
மகிழ்ந்தம்மை யருகழைத்தாள்
ஆனபடி யாலின்று துணைமாலை யம்மையுடன்
அம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் மாலை யொளிர் மாணிக்க மாலையுடன்
அம்புலீ யாட வாவே. 66

தானம்

விண்ணெலாம் பரவுகுரு பன்னியை விழைந்துபெறு
விடலரிய தொரு சாபமும்
வெகுளி மிகு தக்கனிடு வெஞ்சாபமுந்தீர
வேண்டினா லீண்டு பாயும்
தண்ணுலாங் கவுணிய நதித்திவலை சிலதோய்தல்
சாலுமே முன் மாளவந்
தாங்குமர சன் சோம சீதளன் குட்டமும்
சாபமுந் தீர்ந்த தறிவாய்

மண்ணெலாம் விண்ணெலாம் மற்றுலகமெல்லாம்
வழுத்துபுவ னேச்சரத்து
மாதேவர் திருமேனி நாதனார் இன்பமனை
வாழ்க்கைப் பெருந்துணைவி பெண்
அண்ணலா முயர்சூல புரிமேவு மம்பிகை யொ
டம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் மாலை யொளிர் மாணிக்க மாலையுடன்
அம்புலீ யாட வாவே. 67

இந்தப் பிறப்பிலுறு கூனுமினி மேலெழு
பிறப்பிலுறு கூனுமேகும்
ஏந்திழையர் நரைதிரையன் அழிநோயன் எனவுன்னை
இகழாது பின்றொடருவார்
முந்துமறி வோர்தேயு மதியனென எள்ளாது
முழுமதிய னென மொழிகுவார்
முன்னியிர வுறனீங்கி யகில குவலய மாளு
முடிவேந்த னென வாழ்குவாய்
எந்தவுயிர் களையுநலி அல்லோ னெனப்படுதல்
இன்றி யந்தண னாகுவாய்
இவளருட் கட்கடை பெறிற்சிறியரும் பெறற்
கேதுமரி தாகாது காண்
அந்தண்வயல் சூழ்திருச்சுழி யலம ரம்பிகையோ
டம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் மாலையொளிர் மாணிக்க மாலையுடன்
னம்புலீ யாட வாவே. 68

பேதம்

பொழியுமுன துடலமுத கிரணத்தின் மண்ணிற்
பொருந்து சில பயிர்தழைக்கும்
பொன்மாலை யிவள்கடைக்கண் மாலை யாலுயிர்ப்
பொம்மலெல் லாந் தழைக்கும்
இழியுமுன் கலைகள் பதினாறாகு மிவள் கலைகள்
எண்ணான் கிரட்டியாகும்
இரவாள நின்னமுத முண்டுவா ழமரரும்
இறப்பார் பிறப்பிலுழல்வார்

மொழியுமிவ ளருளமுத முண்டபேர் பேரினை
மொழிந்தபேர் பேறுசிறிதோ
முத்தமிழ்ச் சம்பந்த னாமமந்திர மகிமை
மூவுலகு மே யறியுமே
அழியாத கருணைதரு துணைமாலை யம்மையுடன்
அம்புலீ யாட வாவே
ஆணிப்பொன்மாலை யொளிர் மாணிக்க மாலையுடன்
அம்புலீ யாட வாவே. 69

வெள்ளைமதி யேயுனது நிழலையுறு காமனுடல்
வெந்துருவு வேறாயினான்
விமலையிவள் கமலபத நிழல் மேவுவார் கொடிய
வினை வெயிலின் வெப்புறார்காண்
பிள்ளைமை யொழிந்தபின் தேய்ந்த ழிவை யுன்னுட்
பொருந்துமான் கதியுமதுவே
பெண்ணரசி யிவள்உல கொடுங்குகடை நாளினும்
பெருமான்ற னுடனாடுவாள்
கள்ளமிகு கல்லார மாக்கயவர் கழகங்
களிக்க வரு மதியழகனீ
கற்றார்த மதியழகி ஆதார முடியினிற்
கவினுமதி யழகியிவள் காண்
அள்ளல்வயல் அன்னமலி சுழியலம் பிகையினோ
டம்புலீ யாட வாவே
ஆணிப்பொன்மாலை யொளிர் மாணிக்க மாலையுடன்
அம்புலீ யாட வாவே. 70

சோமனெனு நாமமென் செயுமா சுமந்தனை
சுமதி கெட்டசைவை காமத்
துணை சேரு முகமதிய மடவார் களிக்கவரு
துட்டவுனை யிந்தென்பதோ
சாமனென் பார் திங்க டோறுமடி வது கண்டு
தரணி முனி ராமனென்பார்
தாவுமா னைச்சுமந்தம்புலிப் பேர்கொண்ட
சதுரனுனை யன்றியாரே

நாமமல் லோனிசா சரனொரு குரங்கிநவை
நண்ணுறு களங்கி யென்றிந்
நாடு முழுதும் புகலும் உன்குறையை நாடாமல்
நான் கலாநிதிய னென்னேல்
ஆமறிவு னக்குள்ள தாமெனில் விரைந்திவளொ
டம்புலீ யாட வாவே
ஆணிப்பொன்மாலை யொளிர் மாணிக்க மாலையுடன்
அம்புலீ யாட வாவே. 71

தண்டம்

தம்பாதி நெடுமாலின் வரையா முயிர்க்கெலாந்
தாயாகி யருள் சுரக்கும்
தண் முத்த மாலையுனை யன்பாலழைக்கவும்
தாமதித் தேதிரிந்தாய்
எம்பாவை யிவனவ மதித்ததென் னென்றுசற்
றிணைவிழிக் கடை சிவந்தாள்
இவனுனது திருமுகங் கண்டு நாணின்வேணி
யினைநாக மென்றஞ்சினான்
வெம்பாவி செய்வேள்வி சென்றுண்டு தண்டமுறு
விதநினைந் துட் கூசினான்
மீண்டுமொரு முறைவிர லசைப் பவரு வானென
விளம்பினேம் உய்யவேண்டின்
அம்பா பொறுத்தி யென்றேபணிந் தொரு நொடியில்
அம்புலீ யாட வாவே
ஆணிப்பொன் மாலையொளிர் மாணிக்க மாலையுட
னம்புலி யாட வாவே. 72

தேவரிற் றலையாய மூவரிப் புவனம்
செனிப்பித் தளித்தழித்தல்
தேவியிவள் சீபாத தூளி கொண் டென்ன நூல்
செப்புவது தெளிகிலாயோ
கோவ முற்றிடிலுய்வ தெங்கனே கவளமாக்
கொண்டுவெண் களிறு நுங்கும்
கோளரி யறைந்துட் குரங்கமொடு கொன்றிடும்
கொம்பேறு தாட் சிதைக்கும்

சேவகப் பிள்ளைகைக் கொடியு மூர்தியு முனைச்
சின்னபின்னங்கள் செய்யும்
சிறுவிதித் தழல் மகத் திவள் சினத் தெவருடற்
றீராத வடுவு றாதார்
ஆவவிப் போபிழைப் பாமெனிற் பாணியேல்
அம்புலீ யாட வாவே
ஆணிப்பொன்மாலை யொளிர் மாணிக்க மாலையுடன்
அம்புலீ யாட வாவே. 73

## அம்மானைப் பருவம்

நீலமலை போல் வடிவு காலவனல் காலும்விழி
நெடு வடவை நிகர் குஞ்சிநீள்
நிலவினிரு வகிரனைய வளை யெயிறு கயிறு கதை
நெடியதிரி முனைய கழுமுட்
காலனதிர் உருமனைய கடியகுரல் எருமை மேற்
கண்ணெதிரில் வந்த காலைக்
கழலின் வழிபாடுபுரி மழலைமொழி யந்தணக்
கன்றுக் கிரங்கி யந்த
வேலையெதிர் வந்தியமன்மாள வுதைதந்த பர
மேசனுறை கடவூரினில்
மேவுமபிராமி பட்டர்க்குநீ விண்மீது
வீசு குழைபோல் விளங்க
ஆலை மொழி மாதர்நகை போல வொளிர்தண்முத்த
அம்மானை யாடி யருளே
ஆதிபகவற் கினிய மாது துணை மாலையுமை
அம்மானை யாடி யருளே. 74

மெல்லிய கழைச்சிலை மலர்க்கணைக் காமற்கு
வெண்குடை விரிக்கு மதியோன்
விரிகதிர்ச் செல்வன்றனுரிய பிரியயை மிக
விழைந்தருகு வரவெகுண்டு
புல்லிய வெனத்தள்ள வஞ்சி வெகு தூரமே
போயுமவன் மீளமீளப்
புல்லவரு தோறுமவ ளுந்துவது போலப்
பொலங் கொடிய மாளிகைகள் மேற்

செல்லுலவு வதுபோல மகளிரைம் பாலூட்டு
செறிநறும் புகையும் வேள்வித்
தீயெழும் புகையு மலிதிரி சூல புரிமேவு
செல்வியுண் செங்கைமலரால்
அல்லினை யறுக்குமொளி வீசுபரு முத்தமணி
யம்மானை யாடி யருளே
ஆதிபக வற்கினிய மாது துணைமாலை முத்
தம்மானை யாடி யருளே. 75

காந்தளன கைத்தலத் தரவிந்த ராகமாய்க்
கைநீங்கி மேனியருகிற்
கலந்துமர கதமாகி மார்பருகி லேயாட
கச்செழும் பொன்னுமாகிப்
பூந்தவள நகையருகு நிலவொளிய முத்தமாய்ப்
புருவவிழி யணிநீல மாய்ப்
பொட்டான சந்தனத் தருகுகோ மேதமாய்ப்
போமிடையின் வைதூயமாய்
வாய்ந்தவிண் மீதிலொரு வண்ணமு மிலாமல்
வயங்குமொரு தன்மையின்றி
மருவு மொரு பொரு ளியல்பு தன் னியல்பதாகவே
மருவு முயி ரியல் விளக்கல்
ஆந்தணொளி தெளிபளிங் கம்மானை கண்குளிர
அம்மைநீ யாடி யருளே
ஆதிபக வற்கினிய மாது துணை மாலையுமை
யம்மானை யாடி யருளே 76

விண்ணோங்கு தண்ணிமய வெற்பின்றடஞ்சாரல்
மேவிநீ விளையாடுகால்
விரிகதிர்ப் பதுமமணி வயிரம் வயிடூரியம்
விளைந் ததர ளங்கள் முதலாம்
எண்ணோங்கு மணியெலாந் தந்திற மிழந்துபச்
சென்றவொளி வீசல்கண்டே
எண்ணத் தழுக்காறு நண்ணிமர கத மணியுன்
எழில்நிறங் கவரவேண்டித்

தண்ணோங்கு நின்னருகு வருகாலை யியல்பாய
தன்னிறமு மங்கியுன் மெய்த்
தளிரினிற மிதழ்நகைகண் முதலநிற மாயுட்
சமழ்த்துமீண் டேகல் போல
அண்ணாந்தவிணை முலைத்துணை மாலை மரகதத்
தம்மானை யாடி யருளே
ஆரண முழங்கு சுழிகாபுரி யமர்ந்தவுமை
யம்மானை யாடி யருளே. 77

தருணமங் கலையுனது கருணையங் கடல் விசிறு
தண்டிவலை யுண்ட பேற்றால்
தாமோதரன் குலிசன் அயனுருத்திரனைந்
தடக்கைய னவற்கிளைய சேய்
வருபெருந்தம் பதவி வலிமை யொண் கல்விதிரு
மருவுமின் பரிய புகழும்
வளர்கவின் னுங்கருணை புரிக வென் றன்பின் மிக
வந்தனை புரிந்தேகல் போற்
பருமையொண் கரியமணி பதுமமணி முத்தம்
பதித்துத் தனித்தனி செயப்
பட்டவை யெடுத்து விண்பாலுய்த்து ணேவல்புரி
பாங்கியர்கண் மகிழ்கூரவே
அருணபங்கயமனைய கரதலங்கொடு பலபல்
அம்மானை யாடி யருளே
ஆதிபகவற்கினிய மாது துணை மாலையுமை
அம்மானை யாடி யருளே. 78

வேறு

வேத முதற்கலை யாகிய சொற்குவை
வேதிய னத்திருமால்
விண்ணவர் மண்ணவர் மாதவ விருடிகள்
மேதகு தூமனமும்
போத முயற்சியி னாலடை யாது
புலம்பொடு மீளவுயர்
போதசொரூப பராபரன் இப்புவி
பொற்புற வுற்பவமாம்

சாது சனர்க்கருள் ஈயவுருக்கொடு
தாரணி யுற்றினிய
தாயினுமிக்க தயாவினியற்றிய
சரிதைகள் உறுகவிதை
ஆதரமிக்கடியார்கள் படித்திட
ஆடுக வம்மனையே
ஆதி சிவத்துணை மாலை மடப்பிடி
யாடுக வம்மனையே. 79

ஞால மடக்கொடி சேலையெனப் பொலி
நாலு திசைக்கடல் போய்
நாக தலத்திமை யோர்கள் வெருக்கொள
நானில முட்கொளவே
கோல கலத்துட னேவரு மக்கடை
நாள்குடி ஞைச்சடையார்
கோவமுதிக்கருளாகி மலைச்சிலை
கோலு தடக்கையினீள்
சூல முனைத்தலை மேலுற வைத்துறு
சோக மொழித்திட வாழ்
தோமறு நற்சுழி காபுரி யுற்றருள்
சூல் கொள் விழிக்கயலாய்
ஆல மரற்கமு தாக விழித்தவள்
ஆடுக வம்மனையே
ஆதிசிவத் துணை மாலை மடக்கொடி
யாடுக வம்மனையே. 80

வேறு

கைம்மான் மழுப் படையர் கைம்மாவுரித்து கிலர்
கைந்நா லிரட்டி யுடையார்
கணிமாலை மத்தமறு கணியார் கடுக்கைபகி
ரதிகாவு பொற்சடையினார்
செம்மான மொத்தவுரு வின் வான வர்க்கிறைவர்
தென்னா டுடைச் சிவபிரான்
திருமால் விழிக்கமல மணிசேவ டிக்கமலர்
திரைமா கடற்றுகின் மினாள்

இம்மா நிலத்துயிர்கள் உய்ம்மாறியற்றுதவ
சின் மாறினற் கருணைசெய்
இந்நாடு, மிப்பதியும் இந்நாக வெற்புமுத
லிய சேர்கவிக் கிசையவே
அம்மா திருச் சுழியலின் மாமலைப் புதல்வி
யம்மானை யாடி யருளே
அணிமாதி சித்திதரு துணைமாலை சத்திசிவை
யம்மானை யாடி யருளே. 81

வேறு

பருதி குடிநற் றிருநாடும்
பகரச் சுழியற் பதியு நெடும்
பாவ காரித் திருநதியும்
பாம்பு மலையும் விடைக் கொடியும்
சுருதிப் பரியும் ஓங்காரத்
துளைக்கைம் மாவும் பூங்கொன்றைத்
தொடையும் விரையாக் கலியு மருட்
டுணைச் செங்கோலும் பிணைத்தன் பால்
முருகு கமழும் தமிழ்மாலை
முரலும் வீணை யுடனி சைப்ப
மொய்தா ரசைய வளை கலிப்ப
முறுவ லரும்பச் சிலம்பொலிப்ப
அருமைச்சுழி யற்றுணை மாலாய்
ஆடியருளாய் அம்மானை
அன்னே சொன்ன மணி மாலாய்
ஆடியருளாய் அம்மானை

முத்த மரும்பும் புன்னை வனம்
முதுநீர் வடிந்த சுழியல் கடி
முனையார் சூலப் பதியாதி
முதல்வன் புவனேச்சுரம் விரும்பும்
சித்தி தருகா ளீச்சுவரம்
செழுநீர் மலியுந் திருவயலூர்
செனன மரணத் துயர்க் கஞ்சிச்
சேர்ந்தோர் வினைகள் தீர்த்தருளும்

முத்தி நகர மென வுலக
முழுதும் போற்றுந் தலத்திலமர்
முடியாப் பிறவாத் திருமேனி
முதல்வன் வாழ்க்கைத் துணைமாலாய்
அத்தி முகவற் பெறுபிடியே
ஆடியருளா யம்மானை
அன்னே சொன்ன மணிமாலாய்
ஆடியருளா யம்மானை. 83

## நீராடற் பருவம்.

மாகமுக டுங்கடந் தந்தண்மதி கங்கைநதி
மருவு நெடு முடிவிளங்கி
மணநாறு கொன்றைகமழ் சந்தமேந் திப்புள்ளி
மான்றுள்ளு கைதுலங்கி
ஆகமுழு துங்கதழு நாகமத நாகமட
லரிகொடிய வரியுலாவி
அடியேழு பாதாள முங்கடந் துருவிநிலை
யசைதலொரு காலுமிலதாய்
ஏக முதலாகியுய ரிமயவரை யடிமைகொண்
டிருநீலத் தொருதாணுவாய்
எம்மிறைவர் போலநிமிர் நாகமலை நின்றிறைவர்
இனியதிரு வருள்போலவே
வேகமுட னோடிவரு பாவகா ரிப்புதிய
வெள்ளநீ ராடியருளே
வினைவேலை நீந்தவருள் புணைபோன்ற துணைமானை
வெள்ளநீ ராடியருளே. 84

அமுதுததி மிசையரவ மலையிடைத் துயில்கின்ற
அரியகரு முகில் முகந்தே
அணிபொழில்கள் தழைவுறப் பொழிகின்ற திருவருட்
காகரம தாகி நிறையும்
எமதிறைவர் கருணைமற மென்னுமா னசவாவி
யினிலிருந் தேயிறங்கி
எண்ணுமடி யார்மனத் தண்ணிப் பவப்புழுதி
யில்லாக்கி யுண்ணிறைந்து

முமலமெனுமா சொழித் தழிவிலா வின்புதரு
முடியாத சரித நதிபோல்
முனிவர்சுரர் நரர்கண்முத லுயிர்கள்பய னுகரவலை
மோதியிச் சுழியல் வழியே
விமிதமுற வோடிவரு கவுணிய நதிப்புதிய
வெள்ளநீ ராடியருளே
வினைவேலை நீத்தவருள் புணைபோன்ற துணைமாலை
வெள்ளநீ ராடியருளே. 85

எண்ணற்ற புவனம் படைத்தவனு மவையற்றை
யெல்லாம் புரப்பவனுமே
ஏங்கவரு கொடியவிட முண்டதுவு முததிகடை
யிமையவர்க் கமுதீந்ததும்
திண்ணுற்ற திரிபுர மெரித்ததும் திரியாத
சித்தர் மூவர்க் காத்ததும்
சிலைமா ரனுட லடலையாமா விழித்தவன்
தேவி துயரந் தீர்த்ததும்
உண்ணற்கு நண்பால் விரும்பி யமுபாலனுக்
கொலியமுத கடலீந்ததும்
உன்னியுரை செய்தொண்டர் உள்ளமாம் பள்ளத்தில்
ஓடிவரு பத்தி நதிபோல்
விண்ணதிர வோடிவரு கவுணிய நதிப்புதிய
வெள்ளநீ ராடியருளே
வினைவேலை நீந்தவருள்புணை போன்றதுணை மாலை
வெள்ளநீ ராடியருளே. 86

தேனேறு மிதழிபுனை திருமுடிய ரடிமலர்த்
தொண்டர்மன முவகையேறத்
தென்னாடர் மனமமணர் செய்மாய வலையைச்
சிதைத்து வெளி யேற வழுதி
கூனேறு முடல்நிமிர்ந் தழகேற உயிர்வினைக்
குழியேற வமணர் கழுவாக்
கொடியவுடல் கழுவேற வேதநெறி சைவநெறி
குவலயந் தன்னிலேறக்

கானேறு கரைவையை வெள்ளத்தில் அருகரிடு
கறையேடு கடலினேறக்
கழுமலக் கவுணியிடு மமுதத் தமிழ்க்கவி
கடும்புன லெதிர்த்தேறல் போல்
மீனேற வேறிவரு கவுணிய நதிப்புதிய
வெள்ளநீ ராடியருளே
வினைவேலை நீந்தவரு புணைபோன்ற துணைமாலை
வெள்ளநீ ராடியருளே. 87

தண்ணிலவு தவழ்முடிப் பவளமலை விழிமலர்கள்
தம்மைப் புதைத்த தருணம்
தளிரனைய விரலின்வழி யொழுகுசுர நதிகள்பல
தந்தருள் நிறைந்த முகிலே
கண்ணிலவு கவின்வளம் பருதிகுடி நாடுறக்
கடுகிவரு பாவகாரிக்
கடிபுனலி னாடியணி கற்பூர கங்கையும்
கத்தூரி யமுனை நதியும்
திண்ணிய நகிற்றலைக் குங்கமச் சோணையும்
திமிர் சந்தனப் பொருநையும்
திருமேனி பூசுபொற் சுண்ணமாம் பொன்
சேர்ந்தொருங் கொழுகுமாறு
விண்ணினலை வீசிவரு கவுணிய நதிப்புதிய
வெள்ள நீராடியருளே
வினைவேலை நீந்தவரு புணைமானு துணைமாலை
வெள்ளநீ ராடியருளே. 88

வேறு

கங்கையாட விளந்திங்கட்
கண்ணி யாடத் திருநோக்கிற்
கருணை யாடப் புன்முறுவற்
கனி வாயாட நறுங்கொன்றைத்
தொங்க லாடத் திசையளவித்
தோள் களாடச் சிறு மறிமான்
துள்ளி யாட மழுவாடத்
தொண்டர் குழுவெல் லாமாட

மங்கு லாடு மணி மன்றின்
வளர்கூத் தாடு வார்மனத்தில்
மாறாக் காதல் வளர்ந்தாட
வழங்கு மின்ப மாக்கடலே
பொங்கு பாவ காரிநதிப்
புதுநீ ராடி யருளுகவே
பொன்னே சுழியற் பூமாலாய்
புதுநீ ராடி யருளுகவே. 89

வான விண்ணோர் மணிமுடிமேல்
வனைந்து கோட்டுப் பிறையேந்தி
மலைமே லிருந்து வந்துபெரு
மைச்சே லங்கண் மலைந்துலவித்
தேனற் சுவைநீள் கழைக்கரும்பு
செயலை சூதந் தளவமுகை
செந்தா மரைபைங் காவிமலர்
திரைக்கை யேந்திச் செவ்வண்ண
மேனி பொலிய வாருயிர்கள்
வெம்மை யொழிய வினைமாசு
விலக விலகி யுனதொருரு
மேவிப் பூமி மீதுபெயர்
போன பாவ காரிநதிப்
புதுநீ ராடி யருளுகவே
பொன்னே சுழியற் பூமாலாய்
புதுநீ ராடி யருளுகவே. 90

வலியும் புலனைச் சிறைவைத்து
வழியை யடைத்துன் மலர்த்தாள்கள்
மனத்து வைத்தார் திளைத்தாடும்
மாளா வின்ப மாகடலே
கலியும் துயரும் அடியாரைக்
கலவா வண்ண மெந்நாளும்
கருணை பழுத்து நிழல்பரப்பும்
கவினார் கற்ப கக்கொடியே

நலியு மாயைப் பித்தேறி
நைவார் ஆசை வெப்பொழிய
ஞான வமுதஞ் சுரந்தளிக்கும்
நலமார் வானச் சுரபியே
பொலியும் பாவ காரிநதிப்
புதுநீ ராடி யருளுகவே
பொன்னே சுழியற் பூமாலாய்
புதுநீ ராடி யருளுகவே. 91

மதவா றொழுக வருங்குன்றம்
மத்தாப் பிணித்த மாசுணமே
வரிமா சுணமாச் சுழல்பெரிய
வாரி யமுத வாரிதியா
இதமார் தோழி மாரோடும்
எம்மோய் குடைந்து மேலெழுகால்
இயம்பு மங்கட் செங்கமலம்
எழிலார் காவி குமிழ்வள்ளை
சிதமார் முல்லை செவ்வாம்பல்
சிறந்த கோங்கஞ் செங்காந்தள்
செறிந்த காமக் கொடிகள்பல
செனித்தல் போலக் காட்சிதரப்
புதமார் பாவ காரிநதிப்
புதுநீ ராடி யருளுகவே
பொன்னே சுழியற் பூமாலாய்
புதுநீ ராடி யருளுகவே. 92

அரிய யோகப் பெரியோர்கள்
ஆறா தாரத் தப்பாலாம்
அமுத மதிவெண் கிரணத்தால்
ஆட்ட மூலத் தமரம்மே
உரிய செல்வத் திருவாளர்
உளுற்று பதினா றுபசாரம்
ஓங்கும் பூசை தனிற்கும்பத்
தூற்றுந் தீர்த்த முவந்தாளே

பெரிய கவிஞர் தீஞ்செஞ்சொற்
பிணைய லணிந்து மனமுருகிப்
பெய்யுங் கண்மா ரியிலாட்டப்
பெயரா வரங்கள் தருதாயே
புரியிங் கிதனிற் பவகாரிப்
புதுநீ ராடி யருளுகவே
பொன்னே சுழியற் பூமாலாய்
புதுநீ ராடி யருளுகவே. 93

வேறு

எங்கணு நிறைந்தவா னந்தநல் வசந்தமலர்
ஏந்திவளை கொடிமாடெலாம்
எழினிறம் பலபல விரிந்ததா மரைமலர்
இவற்றிலிசை மதுகரங்கள்
தங்கநிற வன்னநிறை புரிமதுர வொலிமிகத்
தண்டென்றல் தடவவசையும்
சவியுறு தடத்திலடி யேவன் மக ளிரோடு
தையணி புனலாடல் செய்
மங்கல நினைப்பவர் சுரப்பிணி ஒழிப்பரென
மறைபுகலு மாதவத்தால்
மங்கலை யுன்நீராடல் கண்கண்டு வெம்பிறவி
வலிய சுரநோ யொழிந்தோம்
பொங்கவரு நின்கருணை யனையகவு ணியநதிப்
புதுவெள்ள மாடி யருளே
புவனமுழு தாளுடைய சிவன்மகிழு மாதேவி
புதுவெள்ள மாடி யருளே. 94

ஊசற் பருவம்

செக்கச் சிவந்தபவ ளக்கா னிறுத்தியெண்
டிசையும்வெள் ளொளி செலுத்தும்
திண்வயிர விட்டமிட் டமுதகிர ணங்கணிகர்
திரண்முத்து வடமிணைத்து
மிக்கவிலை பெறுபற்ப ராகவொண் பலகைமிசை
மென்றூவி யணைகிடத்தி
விரிமலர் பரப்பியுளம் விழைவுகொளு மாறுபுனை
வினைவிளங் கூசலேறி

அக்கற்ப காடவிப் பொன்னாடு மம்புவியும்
அணிமணிப் பணிகணாடும்
அமர்கின்ற பல்லுயிர்த் திரளுக்குமின்னருள்
அளித்துத் திருச்சுழியல்வாழ்
பொக்கமற் றுற்றதாயான புவனேச்சரீ
பொன்னூச லாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூச லாடியருளே. 95

சீதள நிலாவொளி பரப்புவெண் முத்தவொளி
திவளுமா ளிகையின் முன்றிற்
றிரண் முத்தநிரைகொண்டி ழைத்தபொன்னூசலிற்
சேர்த்தவெண் ணிறவணையின்மேல்
மீதணவு மாணிக்க தீபங்கள் செவ்வொளி
விரிக்கவுன் றிருமேனிமேல்
வீசுமர கதமணித் தேசுங் கலந்தொளிர
வீற்றிருக் கின்றதோற்றம்
மாதவள வமுதக் கடற்கட் பணாடவி
மணிச்சூட்டு வெண்ணிறத்த
வரியர வணைப்பொலியு மரகத நிறத்தமையன்
வைபவப் பொலிவுகாட்டப்
போதளவு மாதர்குடி வாழும்நீள் விழியினாள்
பொன்னூசலாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூசலாடியருளே. 96

அந்தண்மறை வேள்வியெழு மாகுதிப் புகைமாதர்
ஐம்பா னறும்புகையுமாழ்
ஆழியை முகந்துசூற் கொண்டமுகி லுந்தலை
யமர்ந்து தண் டலைவளர்ந்த
பைந்தலை யவிழ்ந்தகூந் தற்கமுகி னிற்கட்டு
பனிமுத்த வூசலேறிப்
பசுமயிலொ ரெகினத்தின் மிசையேறி யாடல் போற்
பாவைநீ யாடுதோறும்

வந்தித்து நின்கழுத் தொப்பென் றகந்தையினி
மருவிடே மெனவணங்கி
மணிமுத்து மரகதந் திறைசொரிந் தாலென
வளஞ் சொரிய எந்தலையிலும்
புந்தியிலு மகலாத கந்தமல ரடியினாள்
பொன்னூசலாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூச லாடியருளே. 97

சத்தசதி மூககவி தருபஞ்ச சதியுனது
சௌந்தர்ய லகரிசந்தச்
சாமளா தண்டகம் பேரின்ப சாகரத்
தவமிலலி தாசகச்ரம்
உத்தம கவித்திறமை மிக்கபிற பத்தர்பலர்
ஓதுபல வேறுதுதிகள்
ஓதுபவர் காதிமறை யாதிநினை வோர்பூசை
ஓவா துகுற்று தொண்டர்
சித்தகம லத்தூறு தேனே யிமாசலச்
சிகரியி னுலாவு மயிலே
செகதலமும் விலையாகும் அரியகவி மாலைபுனை
திருவாளர் சேமநிதியே
புத்தியொடு முத்தியருள் சுழியலமர் செல்வியே
பொன்னூசலாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூசலாடியருளே. 98

ஐந்துவய திற்செந்தி லாதிபன் அருட்டுணையி
னால்வாக்கி னாக்க மெய்தும்
அரியகவி குமரகுரு பரமுனிவன் மீனாட்சி
யம்மைக் கணிந்த தமிழும்
சந்ததமு நினைநினைந் துருகிவழி பாடுபுரி
சதுரனணி வீரைநகர்வாழ்
தண்டமிழ்க் கவிராச பண்டிதன் விண்டருள்
சவுந்தரிய லகரி கடவூர்

அந்தண னினாகம வழிப்பூசை பயில்அன்பன்
அபிராமி பட்டனோதும்
அபிராமி யந்தாதி யுஞ்சிதம் பரமுனிவன்
அருள்பாட லும்பயிலுவார்
புந்தியி னினைந்தவா முதவியருள் சுழியலாய்
பொன்னூசலாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூச லாடியருளே. 99

இருளும்வெளி யெனவெமது ளறிவைமுழுவது மறைத்
திடுமலமும் இருவினைகளென்
றெழுமஞ்சு மலையுமிலை யாகவெப் பொருளுமுள
இயல்புதெளி வாய்விளங்கப்
பருதியொரு கோடியென விரிகிரணம் வீசுநின்
பாதத்தி னருணநிறம்வெம்
பகையான பிறவியை யொழித்தவெற் றியினுற்
பவித்தபிர தாபமாக
மருவுசிறு முறுவன் முத்தம்வீசு நிலவினொளி
வரமெவையு முதவலானே
வளர்கீர்த்தியாக வெங்கும்பரவ வாணிதிரு
மகளிந்தி ராணிபரவப்
பொருவில்வள மருவுந்திருச்சுழியலமர் தேவி
பொன்னூச லாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூச லாடியருளே. 100

அண்டபகி ரண்டங்க ளெங்குமொரு நிறைவாய்
அமர்ந்தபர சிவனையகலா
தாதித்த னுள்வெம்மை போனின்ற பரையவற்
கறிவிச்சை செயலாதியாய்
எண்டகு பெரும்புவன முடல்கரண போகங்க
ளெவையும் படைத்தளித்தே
இறுதிசெயும் விளையாட லுக்குற்ற துணைவியாய்
எவையுமா முபகரணமாய்த்

தொண்டுபடு மாருயி ரனைத்திற்கு மன்னையாய்ச்
சொல்லுக் கடங்காத சீர்த்
தொல்லைமுதனீ தக்கன் மலையரையன் அடல்வழுதி
சுதையாகி வருகருணையைப்
புண்டரிகை கலையின்மகள் அமுதகவி யிசைசொலப்
பொன்னூசலாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூச லாடியருளே. 101

பெருந்துறை புகுந்துபர மானந்த வெள்ளப்
பெருங்கடல் புகுந்தாடியெம்
பெருமானி னருளினை நினைந்துட் கசிந்தன்பு
பெருகுதிரு வாசகப்பேர்
அருந்துதித் தேன்மாரி பெய்த திருவாதவூர்
அன்பரிசை பொன்னூசலை
அமுதவிசை கூட்டியொண் கலைமாதுபாடவவ்
வமுதுசெவி வழிபுகுதலும்
இருந்தசிவ பத்திமுத லோங்கித் தழைத்துலகம்
இன்பவமு துண்ணக்கதிர்
ஈன்றுசிவ போகமுற விளைகந்த சாலியே
எண்ணான் கறங்கள் எங்கும்
பொருந்துவள நிறைதிருச் சுழியலி லமர்ந்தமயில்
பொன்னூசலாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூச லாடியருளே. 102

இந்துகலை முடிமணி யெறிக்கின்ற பலநிற
மியைந்துமழை வில் லொளிசெய
இருங்குழற் கற்றையிந் திரநீல ஒளிவீச
இனியநகை பொலியு முகமாஞ்
சந்திர னிலாவீச வீசனுக் கழியாமை
தருகழுத்தணி தழைப்பச்
சகலகலை யமுதுநிறை கும்பத் தனத்துமிசை
தரளமணி வடமொளிவிடக்

கந்தனொருகொம்பனு மிருந்து மகிழ்மடிமேற்
கலந்தசெந் துகில்விளங்கக்
கதிர்செய்மணி மேகலை மிழற்றமஞ் சீரங்
கலின்கலி னெனுஞ் சிறுபதம்
புந்தியிலு மெந்தலையிலும் வைந்த அம்பிகே
பொன்னூச லாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூச லாடியருளே. 103

வையமுமு துந்தாங்கு மலையரைய னுந்தைமனை
மாட்சிமிகு மேனை நும்மோய்
வாழுமிட முயர்கயிலை மாளிகை வழுத்துபவர்
மால்பிரமன் மகபதிமுனோர்
கையிணை குவித்தேவ லெதிர்பார்த்து னருகிலே
காத்திருப்போர் சித்திகள்
காதலன்ம கேசன்மூ வுலகுன் குடும்பமிக்
கனவாழ்வு பெறுவோரியார்
தையலர்கள் நினைவணங்கினர் தங்கள் அன்பளவு
தாமுமிவை பெறுவரதனால்
சலசமுறு மகளிரயி ராணிமுத லோரீண்டு
சார்ந்தூச லுந்திநின்றார்
பொய்யிலருள் செய்தருள்க சுழியலமர் பசியமயில்
பொன்னூசலாடி யருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூச லாடியருளே. 104

எண்ணரிய மகிமைக் குணங்களெம் மிறைவனுக்
கேனையவை யொருபாகமாம்
இடதுபா கம்பெரிய கருணையே யுருவமாம்
என்றறிஞர் சொல வறிந்தேன்
உண்ணிறை பெருங்கருணை யூறுதிரு முலையமுதம்
உண்டதான் முருக னரனுக்
குபதேசம் வைத்தன னெனுளமேவு தமிழ்விரக
னுலகுய்ய மறைபாடினான்

பெண்ணமுத முன்னெச்சில் நச்சியுண்டவர் கவிதை
பெய்யு முகிலான தறிவேன்
பேசுமொழி யாவுநீ என்றுமறை பேசிடும்
பெற்றியா லெனது கவியும்
புண்ணியம்பெறவுன் திருச்செவி மடுத்தம்மை
பொன்னூச லாடியருளே
புன்னைவன நாதர்மனை மன்னுதுணை மாலையுமை
பொன்னூசலாடி யருளே. 105

**துணைமாலையம்மன் பிள்ளைத்தமிழ் முற்றும்.**

# குறிப்புரை

*1.* **மயிடன்** - மகிடாசுரன்

2. **செங்கமலம்+உள்** - செங்கமலம்போன்ற.

*திருமுகத்துள்,* குமுதம் முதலியன இதழ், கண், மூக்கு, பல் இவைதமைக் குறிக்கின்றன. ***சிற்றால் பசுந்தளிர்*** - *திருவயிறு*. **பூத்து, காய்த்து, பலஞ்செய்** - என்பன கவனிக்கற்பாலன.

3. ***சலமின்*** - கங்கை; ***இதழி*** - கொன்றை; **கயல்மை விழி** - அங்கயற்கண்ணி; பார்வதி. அருணம் (மான்). எரி, மூவிலைவேல், துடி, அயன்தலை. **போக்கினர் அவர் தம்** - பதமலர்; **அமுமகன்** - சம்பந்தப் பிள்ளையார். இமவான், மலயத்துவச பாண்டியன் இவர்களுக்கு மகவாய் வந்த அணங்கு. **இருதிரு** - கல்விச் செல்வம், பொருட் செல்வம்.

4. **போது** - மலர்ப்பாணம்; ***கீரன்*** - நக்கீரர்; **போதிக் களிறு** - ஸ்தல விநாயகர்; போதி - அரசமரம் - ஸ்தல விருக்ஷம்; "போதிக் குஞ்சரம் பொன்னடி போற்றுவாம்" - சூழியற் புராணம். **கோதை** - மாலை; **குன்றம் இரண்டு** - ஸ்தனங்கள்; **மாறன்** - பாண்டியன்.

5. **புனல்...கற்பினாள்** - கங்கை, வயின்தோன்றி. துக்கப்படாவகைக்காகப் பொருது; **வெற்பு** - கிரௌஞ்சம்; மலையை, கடலை, அசுர மரத்தை... அடர்த்து நத்து, இக்கு, (கரும்பு) ஈனும் முத்து, பணாடவிப்பால் - ஆதிசேடன்மேல்; "ஈர்க்கிடை போகா இளமுலை"; *திருவாசகம்.* **கராசலம்** - யானை; **வெற்புக்குமாரி** - *கிரிகுமாரி.*

6. *பிரமன் பழிமொழி பகர்ந்தது :*

முன்னைப்பகல் நீயு முகுந்தனுமாய்ப்
பன்னற்கரி தாய பரம்பொருள் யாம்
என்னச்சிவ னெய்தி இகழ்ந்த உனைச்
சென்னித்தலை கொண்டது தேர்கிலையோ!

- கந்த.புரா.காமதகன. (28)

**கஞ்சக்கண் கொண்டல்** - திருமால்; **கமலாசனக் குரிசில்** - பிரமன்; **கம் துமுத்து** - சென்னியை அறுத்து; "பரமனை மதித்திடாப் பங்கயாசனன் ஒருதலை கிள்ளியே" - கந்த.புரா.கடவுள் வாழ்த்து(6)

**7. மெத்தை** - "நாக மெத்தையிற் றுயின்ற நாரணன்" திருப்புகழ். **அகப்பால் - உள்ளே** (மார்பில்) - மார்பிற்றுமாய்ச் சேக்கையிற் செந்திருவைப் பெற்ற அம்மி மேல் தேவியின் அடியை வைக்க இறைவன் குனிந்த பொழுது சடையும் பிறையும் வழுவித் தொங்கின. தேவியை மின்னற்கொடி என்றதனால் அக்கொடி தழைக்கத்தாம் பிரார்த்திக்கும் சதுமுகனைக் கொண்டல் என்றார்.

**8. நாற்கோட்டு மலை** - ஐராவதம்; **கருமலை** - கரியவன், இந்திரன்.

**9. மஞ்சம்** - கட்டில். **அம்புஜ ஒதிமம் (அன்னம்)** - இலக்குமி. **ஒளித்து வைத்த அளை கொண்ட கள்வனை** - மணந்த பின் - கொண்டல் அணையும் தன் வீட்டுக்கு அழைத்து - அவனுக்கு அரியணை அளித்து - அவனை மணி மஞ்சமேல் அணையும் அம்புய ஒதிமம் - என நயம் பெற உரைத்தார். **அளை** - வெண்ணெய், புற்று. **கள்வன்** - திருடன், நண்டு.

**பாவகரி நதி** - கவுண்டின்னியநதி என்றும் பெயர். கவுண்டின்னிய முநிவர் பொருட்டு இறைவன் அழைத்த நதி: "மகிழ்தர விவ்வாறழைத்தனம் உனது பொருட்டினின் வந்த காரணத்தாற், பகர்தரு கவுண்டின் னியநதி யென்று நாமம். இப்புனல் படிவோர்க்குச், சகல பாவமும் போம் ஆதலாற் பாவகரி யெனும் பெயர் தரித்தினமால்". **சூழியற் புராணம்** - பாவகரி நதி சுருக்கம் (33).

கொண்டையங்கண் துவரிதழ்: **கிஞ்சுகம்** - கிளி ஒதிமம்; என முன்னர் உரைத்தற்கேற்ப 'கிஞ்சுகக் குஞ்சு' என்றார்.

**10. உலகெலாங் கற்பிக்கும் எந்தை** - பிரமன்; சதுமலர்ச் செங்கை - மலரன்ன நான்கு திருக்கரங்கள்; **தவளச் சரோருகம்** - வெண்டாமரை. மேகக்குழாமும் - தூபமும் நிறைவதால்; **அளி** - கருணை; வண்டு.

**அறங்கொண்ட கரம்** - அறம் வளர்த்த திருக்கை.

**11. பாலையந்தல மடப்பிடி** - பாலை நிலத்திற்குரிய காளி "திரிசூலி கௌமாரி யொரு பாலைக்கிழத்தி நீலி" - திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்

கருணைத் தெண்ணீரை உள்ளக் கரத்தில் வார்த்து அன்பு அடுப்பிலேற்றி, தியான அரிசி பெய்து, கற்பு அழல் இட்டு, விழிக்கடையிலூதி, அண்டமெனும் சோறு அமைத்து, ஈற்றில்தன் அன்பனுக்கு (சிவபிராற்கு) ஊட்டி.

**12.** "செம்பாதி மெய்யுங் கரும்பாதியாக" - மதுரைக் கலம்பகம் (28). **எழுவர்கள்** - சத்தமாதர்கள். **இச்செய்யுள்** - "கடகளிறுதவு கபாய் மிசைப் போர்த்தவள் (ருத்திரி - மகேஸ்வரி) கவிகுலி துறுகவின் வாரியைத் தூர்த்தவள் (நாராயணி) கடல்வயிறெரியவொள்வேலினைப் பார்த்தவள் (கௌமாரி) கடிமகழ் தருமலர் தார்முடிச் சேர்த்தவள் (இந்திராணி) இடியுக வடலரி யேறுகைத் தார்த்தவள் (துர்க்கை - காளி) எழுதருமுழுமறை நூலினிற்கூர்த்தவள் (நான்முகி - பிராமி) எயிறுகொ டுழுதெழு பாரினைப் பேர்த்தவள் (வராகி) எனுமிவ ரெழுவர்கள் தாண்முடிச் சூட்டுதும்" - என வரும் மீனாக்ஷியம்மை பிள்ளைத் தமிழ்ச்செய்யுளைப் பெரிதுந்தழுவுகின்றது.

**வழிதுமறை** - வழி-தூ-மறை (?); 'முழுதுமறை' என்றும் இருக்கலாம்.

13. **பரம்** - பாரம்.

16. **மீன்...துவசத்து அரசு** - பாண்டியன்.

17. **எண் தரளம் ஒன்று** - புலாக்கு முத்து ஒன்று. ஓதிமம் பேடு - பெண் அன்னம். முறுவல் ஒளிபெற பன்னாளும் அலைவது ஒத்து மூக்கில் தரளம் ஒன்று ஆடவிட்டு. **முறுவல்** - பல். தரளமைக்குமிழ் உற்றலைய (51) "மூரலொளியைக் கவர நில்லாதலைந்துவர" - (55); விண்கங்கைபுரையும் ஆரம்.

19. **கண்டம்** - கழுத்து. **வண்டின் இனங்கள்** - கைவளைகள். "கைவண்டுங் கண் வண்டும் ஓடக் கலையோட" - ஆதியுலா 98.

21. **மலையமன்** - மலயத்துவச பாண்டியன்.

22. இருவினை, மும்மலம், எழுபிறப்பு. **மருமகள்** - சரஸ்வதி.

"திருமகள் கலைமகள் தலைமகள் மலைமகள் செங்கோ செங்கீரை" - என வரும் மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் அடியைத் தழுவியது.

23. **பாவகரிநதி** - ஒன்பதாஞ் செய்யுளின்கீழ்க் குறிப்பைக் காண்க. **உகளும் பெருவாளை** - ......., **அத்தம்** - பொருள், செல்வம். **முத்திபுரம்** - சுழியலுக்கொரு பெயர். "முதுநகர்க்கிடு பெய ரியற்றினன் முத்திமாநக ரென்னவே" - சுழியற்புராணம் - முத்திமாநகரச் சருக்கம். (27)

25. **தரளம், நித்திலம், முத்து** - ஒரு பொருட் பல சொற்கள். **பூன்றமதி** - பூரணசந்திரன்; நாகர் மணியால்புனை மாடம், முடி, குழை - வெயில் எறிப்ப.

27. பொற்பொருப்பு - பொன்மலை, மேரு: இரசதத்தின். பொருப்பு - வெள்ளியங்கிரி - கயிலை. தோட்டி - கொக்கி.

28. புகை முகில்மான, பனிநீர் இழிவது முகிற்...புனல் சிவண, மலர்கழிவது...மழைபெயுமது போல. சூலபுரம் என்பது திருச்சுழியலுக் கொருபெயர். கடைநாள் பிரளயம் வந்தபோது பாண்டியன் வேண்டுகோட்கிரங்கி இறைவன் திருச்சுழியல் நகரை சூலமுனையிலேந்திப் பரந்த காரணத்தால் சூலபுரம் எனப் பெயர் போந்தது; "செழியன் முன்னர் தோன்றி யரசேநீ யஞ்சலென்று முத்திபுரம், தன்னைப் பிலத்தா டுறப்பேர்த்துச் சுடர்மூவிலைவேற் றலைக்கேந்திப், பின்னைக் கிறைகுன்றேந்தியபோ னின்றான் நகரம் பிறழாமல்". நீத்தல் கரந்து வடிந்துள் ளடங்கியபின் பூமிநாதன்...முன்போல விடுத்தா னதனாற்சூலபுரம். சுழியல் புராணம் - திரிசூலபுரச் சருக்கம்.

29. **வினையைத்தடிதரு படை** - வேல் - "வினையோடவிடுங் கதிர்வேல்" - கந்தர் அநுபூதி. "வினையெறியும் வேல்" - திருப்புகழ் (1200). **"படையிற்றிகழ்விழி"** - "மறச்சிறுமி விழிக்கு நிகராகும்...குகன்வேலே" - திருவகுப்பு - வேல் வகுப்பு. **மயிடப் பதகன்** - மகிடாசுரன். **வரை** - மூங்கில். **பவகரி** - பாவகரிநதி.

30. **தவளையின்தொனி** - முழவத்தொனி, **பணிலத்து ஒலி** - சங்கொலி, **ஞிமிறுஆர்ப்பு** - மறையொலி; **கவிகள்** - குரங்குகள். பதுமஅணை; அரச அ(ன்)னம். **ஞாலம்** - உலகு. **தீப்போலப் பொலிதருமலர் மொய்த்தடம்** - செந்தாமரைக்குளம். **மனை** - திருமண வீடு.

31. **தனம** - ஸ்தனம். **உரத்திடைசுவடு...வளைத்தளிரால்** - வளைத்தழும்பு.

32. ஏழ்கடலுண்டகை - விநாயகமூர்த்தி கடலுண்டது; விநாயக மூர்த்தி (விஷ்ணு) கூர்மத்தை யடக்கியபோது தமது துதிக்கையால் கடல் நீரெலாம் உறிஞ்சினார். "திரைபொருவேலைநீ, ரொன்று பூட்கை நெருங்கரத் துட்புக நின்று றிஞ்சஅந் நீரொடும் ஆமைவெங்குன்றும் அந்த கொடுங்கரம் புக்கதால்" - உபதேசகாண்டம் - கூர்மாவதாரச் சருக்கம் (100); இது "மகர சலநிதி வைத்த துதிக்கர வளருகரிமுக ஒற்றை மருப்பன்" என்னுந் திருப்புகழாலும், "மாமனைப் போற்கோடே ந்திக் குறுமுனி போற் கடலையெலாம் வாரித்துய்த்து" - என்னுஞ் சுழியற் புராணத்தாலும் ஒருவாறு விளங்கும். பவளக்கிரிபோல் தந்தி - விநாயகர். "விநாயகன் சிவந்த பவள மதயானை" (1019), 'பவள தொப்பையப்பன்" (1117), "பாரதம்...மேருவில் எழுதிய பவளக்குன்று" (960) - திருப்புகழ்.

ஐந்து, ஏழு, ஆறு, ஒன்று, மூன்று, இரண்டு, நான்கு - என எண்கள் வருவன கவனிக்கவும்.

34. ஏற்ப, கடுப்ப, ஒப்ப, ஏய்ப்ப - சப்பாணி கொட்டியருளே.

35. சிந்துபதி - சயத்திரதன். நின்முன் வந்தகார் - விஷ்ணு (கிருஷ்ண பகவான்) சங்கொலி மிஞ்சவும் இடிமுழக்கு எஞ்சவும், வாரிக்கலிப்பு அஞ்சவும், பாவை கொஞ்ச இட்ட தாடனம் ஒப்பவும் - சப்பாணி கொட்டியருள்.

36. பல புட்கள் - வினைப்பயனாம் சுகதுக்கங்கள்; பாறுற்றிட - நிலைகொட்டோட - "பழவினைகள் பாறும் வண்ணம்" - திருவாசகம்.

37. கார்க்கொண்டல் - திருமால். திருமாலின்மயல் நீங்க பார்வதிதேவி துழாய்க்கோதை உதவியது - காஞ்சிப்புராணத்திலும் உபதேசகாண்டத்திலும் காண்க.

சடைப் பவளவெற்பு - சிவபிரான் - சுவடெடுத்தது - காஞ்சிப்புராணம் தழுவக்குழைந்த படலத்தில் காண்க. விழிபொத்தி யிருளுய்த்தது - இருநாழி நெல்லால்...உணவளித்தது - இவை காஞ்சிப் புராணத்தில் காண்க. மேதி முகவன் - மகிடாசுரன்.

38. தேவி கூந்தல் வர்ணணை: மலர்ப்பொழில், கங்குல், தேவி திருவடிக்கு அன்புதராத மனம், சைவலம் (குளப்பாசி), (இதழி) கொன்றைக்காய், மைக்கடல், கமுகின் கூந்தல், கரிய வண்டல், வண்டின் ஒழுக்கு, அஞ்சன வைப்பு, கொண்டல் - கூந்தற்கு உவமம்.

கூடிய பங்கு - சிவபிரான்.

39. தேவி கண் வர்ணணை: வாள், அளி, கணை, கடல் சேல், அயில் - கண்ணுக்கு உவமை.

ஆணவவெற்பு - சூர்; வெற்பு - கிரௌஞ்சம்; மைந்தன் - முருகபிரான்.

40. சூது - சொக்கட்டான் கருவி. மேனகை - மேனை (மேனகாத்மஜா - பார்வதி; கொம்பின் வருங்...கனி).

42. மறைச்சிறுவர் - திருஞானசம்பந்தர்.

43. திருமேனிக் கடவுள் - திருமேனிநாதர் - சுவாமி திருநாமம்.

45. தென் - இசை, இனிமை.

46. செங்கதிர் முன் மின்மினிக்குலம் ஒளி மழுங்கி நலியுமாறு தேவியின்

முறுவன் முத்தத்தின் முன் - மதி, பணை (மூங்கில்), வளை (சங்கு), கமுகு, கரும்பு, நெல், தாமரை இவை தம்முட் பிறக்கும் முத்து ஒளி மழுங்கி நலியுமென்க.

முத்து பிறக்கும் இடம் 20 :

**தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி**
**நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்னார்**
**கந்தரஞ் சாலி கழைக்கன்னல் ஆவின்பல் கட்செவி கார்**
**இந்து உடும்பு கராமுத்தம் ஈனும் இருபதுமே**

**- ரத்தினச் சுருக்கம்.**

'கொழுதி மதர் வண்டு' - என்னும் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் - முத்தப்பருவச்செய்யுள் (3) ஈண்டு ஒப்பிடற்பாலது.

47. **வேய் ஈன்றருள்** - முத்தம் என்றது - இறைவன் மூங்கிற்றோன்றியதைக் குறிக்கின்றது. "வேய் முத்த நாதர்" என இறைவனுக்கொரு திருப்பெயர் உண்டு. திருநெல்வேலி, திருப்பாசூர்த் தலபுராணங்களைக் காண்க.

48. இச் செய்யுள் திருக் கோபுரங்களின் பெருமையைக் கூறும். கனி - கன்னி.

49. **கஞ்ச முத்தம்** - பிரமன், **குளக் கண்** - நெற்றிக்கண் அயிற்கட் டங்கு முத்தம் - கண்ணீர்.

**அங்கசற்கு** - அருவுரு - தரும் - ஐயன்;

50. இச் செய்யுள் திருமதிலின் உயர்வு கூறும். கார் இனம்; **காறாவி** - கால் தாவி.

51. **தரளம்** - (புலாக்கு) முத்து - குமிழ் - மூக்கு; **மகனை** - முருகரை, எடுத்து-உறவில்-திரிய. குமிழ் உற்றலைய. 17, 55 - பாடற் குறிப்பைக் காண்க.

**முழுமதி வழியினில் எழு** - சந்த்ர குலத்து உதித்த பாண்டியன் மகளாய்த் (தடாதகை பிராட்டியாய்த்) தோன்றியது.

குழல் போலும் மொழிநிதி யுற்ற பிராட்டி.

53. **செய்ய புந்தியில்** - செவ்விய புந்தியில்: **காஞ்சனத் தையல்** - காஞ்சனமாலை: பிசிதமாலையான் - வேப்ப மாலையான் (மலையத்துவசன்).

54. செம்பஞ்சிச் சீறடி மேலேபட்ட காரணத்தால் மதி சிவந்து பருதி போலாயிற்று; விண்ணதி சிவந்து குருதி போலாயிற்று.

"தேனொழுகு கஞ்சப் பொலன்சீறடிக்கூட்டு செம் பஞ்சியின் குழம்பாற்
றெள்ளமு திறைக்கும் பசுங்குழவி வெண்டிங்கள் செக்கர்மதியாக் கரைபொரும்
வானொழுகு துங்கத் தரங்கப் பெருங்கங்கை வாணிநதியாச் சிவபிரான்
மகுடகோ டீரத் தடிச்சுவ டழுத்தியிடு மரகதக் கொம்பு

- மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ் - வருகை (5)

55. "முரலொளியைக் கவர...அலைந்த - "முறுவலொளி பெற..அலைவதொத்து" (17); தரள மைக்குமிழ் உற்றலைய (51) உதர ஆல் தன்னில் - ஆலிலை போன்ற வயிற்றில் எண்ணின்றும் ஒரு தண்டரளம் - எள்+நின்றும்+ஒரு தண்டரளம் - புலாக்கு முத்து. எள் - எட்பூ - மூக்கு

(இருமடியாகு பெயர்).

**56. கோமலை** - மேரு.

**57.** இச்செய்யுள் அம்பிகையைப் பெண் யானையாக உருவகித்துக் கூறுகிறது. தந்தம்: பற்கள், யானைக் கொம்பு பாகன் - பாகத்திலுள்ள இறைவன்; யானைப்பாகன்.

**59. தமிழ் விரகன்** - ஞானசம்பந்தர்;

**விதரணம்** - வள்ளண்மை.

**61. உததி** - கடல். **பிசிர்** - சிறுதுளி. **சதமகன்** - இந்திரன். சிவபெருமானுக்குத் தாய் தந்தையர் இல்லாமையால் அம்பிகையை மருமகள் என அழைப்பாரில்லை.

**62. அரிப்பிணவு** - பெண் சிங்கம்.

**63. விம்பம்** - நிழல்; **ஆடி** - கண்ணாடி; **உள் வேட்டவா** - மனம் விரும்பிய விதம்.

**64.** திருநாவுக்கரசர் சந்திரனுக்கு உவமை. **உடுக்கணம்** - நட்சத்திரக் கூட்டம்.

**65.** திருஞானசம்பந்தருக்கும், சந்திரனுக்கும் சிலேடை (சம்பந்தர்) சிவபாத இருதய இருடிகேசன் எனு மாதவர் சிவபாத இருதயர் என்ற பெயர் பெற்றவரும் புலன்களை வென்றவருமானவர். (சந்திரன்) சிவனுடைய பாதத்தை இதயத்தில் வைத்தவனும், இருடிகேசவனுமான திருமால்.

அமுதம் உண்டாயினை சம்பந்தர் அம்பிகையளித்த அமிர்தம் உண்டு மேன்மை பெற்றார். சந்திரன் அமுதம் உடையவனானான்.

**வளத்தமிழ் தளித்து வாழ்வாய்** - சம்பந்தர் வளமான தமிழ் மழை பெய்தார். சந்திரன்; வளத்தையுடைய அமிழ்தை அளிக்கின்றான்.

மூன்னிய வரத்துறை...உலாவி வருவாய்: **சம்பந்தர்** - தாம் அடைந்த திருவரத்துறை என்னும் பதியில் முத்து விமானம் பெற்றுப் பழைமையான தலந்தோறும் யாத்திரை செய்தார். **சந்திரன்** - வரத்தின் வழியாக முத்து விமானம் பெற்று உலாவி வருகின்றான். முதம் : இன்பம். குவலயம் : உலகம்; நீலோற்பலம்.

**66.** சதபரிப் பெருவேள்வி: நூறு அசுவமேதம். திருமாலின் மனத்திலே தோன்றியதால் சந்திரன் உமைக்குத் தமையன் மகனாவான். வாரணப்பிடி: தெய்வானையம்மை. சசி: இந்திராணி.

**68.** இரவுறல நீங்கி: இராத்திரியில் வருதல் நீங்கி; பிச்சை எடுப்பது நீங்கி. குவலயம் : குவளைமலர். பூமி, வேந்தன், அல்லோன், அந்தணன் என்பன சந்திரனுக்கு மறுபெயர்கள்.

**70.** சந்திரன் மன்மதனுக்குக் குடையாகும். கள்அம்: வஞ்சனை, தேன், கல்லார மரக்கயவர் : கல்லாத அந்தப் பெரிய கீழ் மக்கள்; குவளை மலராகிய நீர்ப் பூக்கள்.

**71.** சுமதிகெட்டு அசைவை: நல்லறிவு கெட்டு அலைகின்றனை. நல்லறிவை இழந்து சைவன் அல்லாதவன் ஆகினாய். முகமதிய மடவார்: மதிபோலும் முகமுள்ள பெண்டிர்; பிற மத மகளிர். இந்து; வைதிக சமயத்தவன் சந்திரன். அம்புலி: அழகிய புலி; சந்திரன். அல்லோன்: பொல்லாதவன், இரவுக்குரியோன்.

*நிசாசரன்:* இராக்கதன், இரவில் திரிபவன். *குரங்கி:* குரங்கு போன்றவன். மானையுடையவன். கலாநிதியன். கல்விச்செல்வன், சந்திரன்.

72. தம்பம் : ஒரு வகை சிறு பூச்சி.

73. சேவகப்பிள்ளை: முருகன். ***சிறுவிதி*** - தக்கன். பாணியேல். தாமதியாதே.

74. ஆலை மொழி: கருப்பஞ்சாறு போன்ற சொல்.

76. **அணி** - அருகில்.

77. **சமழ்த்து** - நாணப்பட்டு.

78. **திவலை** - துளி, **குலிசன்** - இந்திரன்.

80. **குடிலை** - ஆறு. **தவசின்** - தவசினால், **மாறுஇல்** - ஒப்பில்லாத.

83. **அத்தி முகவன்** - யானைமுகன்.

84. குறிப்பு : - இப்பாட்டு சிவபெருமானுக்கும் மலைக்கும் சிலேடை.

87. **கழுமலக்கவுணி** - சீர்காழியிலவதரித்த ஞான சம்பந்தர்.

90. இப்பாட்டு அம்பிகைக்கும் ஆற்று வெள்ளத்திற்கும் சிலேடை.

92. **புதம்** - அற்புதம் (தலைக்குறை)

95. **பற்பராகம்** - செந்நிறமணி; **தூவி** - அன்னத்தின் இறகு.

95. **பொக்கம்** - பொய்.

96. **தவளம்** - வெள்ளைநிறம். **பணாடவி** - படங்களின் கூட்டம்.

97. **ஐம்பால்** - கூந்தல்; **எகினம்** - அன்னப்பரவை.

98. **காதிமறை** - பஞ்சதசாட்சரி மந்திரம்.

100. **பிரதாபம்** - வெற்றியால் வருவது; செந்நிறமானது. ***கீர்த்தி*** - வள்ளன்மையால்வருவது; வெண்ணிற மானது.

102. **கந்தசாலி** - உயர்ந்த சாதிநெல். **சாலி** - கற்பரசி.

